உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

“எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு”—திருவள்ளுவர்.


| தொகுதி | இரக்தாட்சி ஹு மார்கழி மீ கஉ | பகுதி |
| --- | --- | --- |
| 10 | 1924 ஹு டிசம்பர் மீ 15உ | 6 |

## கடவுள் வணக்கம்.

ஆதியந்தங் காட்டாத முதலா யெம்மை
யடிமைக்கா வளர்த்தெடுத்த வன்னை போல
நீதிபெறுங் குருவாகி மனவாக் கெட்டா
நிச்சயமாய்ச் சொச்சமதாய் நிமல மாகி
வாதமிடுஞ் சமயநெறிக் கரிய தாகி
மௌனத்தோர் பால்வெளியாய் வயங்கா நின்ற
சோதியையென் னுயிர்த்துணையை நாடிக் கண்ணீர்
சொரியவிரு கரங்குவித்துத் தொழுதல் செய்வாம். (1)

அகரவுயி ரெழுத்தனைத்து மாகி வேறு
யமர்ந்ததென வகிலாண்ட மனைத்து மாகிப்
பகர்வனவெல் லாமாகி யல்ல வாகிப்
பரமாகிச் சொல்லரிய பான்மை யாகித்
துகளறுசங் கற்பவிகற் பங்க ளெல்லாந்
தோயாத வறிவாகிச் சுத்த மாகி
நிகரில்பசு பதியான பொருளை நாடி
நெட்டுயிர்த்துப் பேரன்பா னினைதல் செய்வாம். (2)

ஆயுங் கலையுஞ் சுருதியுங் காண்டற் கரியவுனைத்
தோயும் படிக்குக் கருணைசெய் வாய்ச்சுக வான்பொருளே
தாயும் பிதாவுந் தமருங் குருவுந் தனிமுதலு
நீயும் பரையுமென் றேயுணர்ந் தேனிது நிச்சயமே. (3)

அல்லும் பகலு முனக்கே யபய மபயமென்று
சொல்லுஞ்சொ லின்னந் தெரிந்ததன் றோதுதிப் பார்கண்மனக்
கல்லுங் கரைக்கு மௌன வுனது கருணையென்பாற்
செல்லும் பொழுதல்ல வோசெல்லு வேனந்தச் சிற்சு கத்தே. (4)

## அரும்பொருள் விளக்கம்.

1. ஆதியந்தங் காட்டாத=தோற்றம் ஒடுக்கம் இல்லாத. (ஓர்போதுற்பத்தியாவதும் ஓர்போதழிவது மில்லாத வஸ்து நித்தியமானது. அதாவது முக்காலத்துமுள்ளது.)

முதலாய்=யாவற்றிற்கும் ஆதியாய்.

அடிமைக்கா=தமக்குத் தொண்டுசெய்வதற்காக.

அடிமையை வளர்ப்போர் தங்கள் அனுகூலத்திற்காக மட்டுமே வளர்ப்பார்கள். அடிமையிடம் பூரண அன்புவைத்து வளர்ப்பதில்லை. ஈசுவரனோ எள்ளளவும் தன் நலங் கருதாது, ஒரு தாய் தன் மகவை அதன்மேல்வைத்த அன்பினால் மட்டுமே வளர்ப்பதுபோல், சகல ஆன்மாக்களையும் இரட்சிக்கிறாராதலின் தொண்டுசெய்யும் அடிமையாக வளர்த்தாலும் **அன்னைபோல் வளர்த்த** என்றார்.

"நீதிபெறுங் குருவாகி"—ஆன்மாக்களுக்கு இருவினையொப்பு மலபரிபாகம் உண்டானபோது ஈசுவரனே குருமூர்த்தமாய் எழுந்தருளுவார் என்ற பிரமாணத்தால் அவ்வாறு கூறினார்.

சனகாதியர்க்கு மெய்ஞ்ஞான நிலையை யுபதேசித்தருளிய தக்ஷிணாமூர்த்தியே மான்காட்டி மானைப் பிடிப்பதுபோல் மானிடச் சட்டைசாத்தி குருமூர்த்தமாக எழுந்தருளுவர் என்பது பிரமாணம்.

> "சனகர் சனற்குமரர் சனந்தரா சனாதர்
> முனிவரர்க்கு ஞான மொழிந்த—முனைவனே
> யென்போல வந்திங்கே யென்னை யெனக்குமறை
> பொன்போலத் தந்தார் பொருள்"—(வள்ளலார்)

சொச்சமதாய்=களங்கமில்லாததாய்.

நிமலம்=மலமற்றது.

வாதமிடுஞ் சமயநெறிக் கரியதாகி=வீண்வாதம்புரியும் சமயவாதிகளுக்கறிவரிதாய்.

பரம்பொருள் எல்லா சமயங்களுக்கும் பொதுவாய், சமயாதீதமாய் அதாவது எவ்விதச் சமயவரம்பிற்கும் அடங்காததாயுள்ளதால் "என் சமயம்தான் உண்மை, உன் சமயம் பொய்" என்று வாதமிட்டாலும் சமயவாதிகளால் அறிய முடியாதது என்றார்.

மௌனத்தோர்பால்=வாக்கற்று மனமற்று செய்கையற்றுத் தானற்றிருக்கும் நிலையாகிய பூரண மௌன நிலையடைந்த ஞானிகளிடத்து.

வெளியாய் வயங்காநின்ற=சாக்ஷாத்காரமாய் விளங்குகின்ற.

கண்ணீர்சொரிய=மனங்கரைந்து அன்புருவாய் ஆனந்தபாஷ்பம் பெருக.

குருவைக்காண்டோறும் உத்தம பக்குவியாகிய சீடனுக்கு மனங்கரைந்து அன்பு பெருகி மயிர்க்கூச்செறிதல், ஆனந்தக்கண்ணீர் வடிதல் முத

லிய குறிகளுண்டாம். அதனுனே அவரது கருணை நோக்கால் சீடனது பாசங்கள் கழன்று ஞானேதயமுண்டாம்.

" ஆசானைக் காண்டோறு மன்புருகுங் கைகுவியு
மாசா ருடம்புமயிர்க் குச்செறியும்—பேசாத
வானந்த முள்ளூறு மக்கணமே பாசங்க
டானந்து முத்தி தரும்."—(வள்ளலார்.)

2. "அகர உயி........அகிலாண்ட மனைத்துமாகி"—'அ' என்பதே வாயினின்றும் முதற்பிறக்கும் சத்தமாகும். அது வாயைத் திறப்பதாலேயே யுண்டாவது. ஆதலின் இந்த 'அ' என்பதே எல்லாச் சத்தங்களுக்கும் ஆதியாயுள்ளது. மற்ற எல்லா எழுத்துகளிலும் இது உயிர் போல் கலந்திருப்பது. அப்படியிருந்தும் தான் வேருகவும் உள்ளது. இதைப்போன்றே ஈசுவரன் யாவற்றிற்கும் ஆதியாய் சகல பிரபஞ்சங்களிலும், எல்லாப் பொருள்களிலும் உயிர்போல் கலந்திருந்தும், எதிலும் தாக்கற்று வேருகவும் இருக்கிறுர் என்பது பொருள்.

" அகரமுதல வெழுத் தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"—என்றுர் நாயனுர்.

பகர்வனவெல்லாமாகி=சொல்லப்பட்ட எல்லாப் பொருள்களுமாகி.

அல்லவாகி = (யாவற்றையும் அந்தரியாமியாயிருந்து இயக்கிவைத்தும்) அவை தானுகாமல்.

"சங்கற்ப விகற்பங்களெல்லாம் தோயாத அறிவாகி"—பிரபஞ்சத்தின் சிருட்டித் திதியாதிகளில் விருப்பு வெறுப்பின்றித் தாக்கற்று நிற்கும் ஞானவொளியாய்.

ஆண்டவன் தனக்கென ஒன்றும் கருதாமல் ஆன்மாக்கள்மேல் வைத்த கருணையாலேயே பஞ்சகிருத்தியங்களை யியற்றுகிறுராதலின் அவர் விருப்பு வெறுப்பற்றவர்.

" வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில"

என்றனர் பொய்யாமொழியாராகிய நம் நாயனுர்.

" விருப்புவெறுப் பில்லான் வேதவிதி செய்தோன்
நெருப்புருவ னெங்கணிம லன்"—(வள்ளலார்-பதியியல்.)

பசுபதி=பாசத்தோடு கூடிய ஆன்மாக்களை இயக்கிவைக்கும் தலைவன்.
பேரன்பால் நினைதல் செய்வாம்=அன்புருவாய்ப் போற்றுவாம்.

3. உனைத்தோயும்படிக்குக் கருணை செய்வாய் = உன்னையடையும்படி அருள்புரிவாய்.

ஈசுவரனை யடைவதற்கு அவன்ருள் வேண்டுவது இன்றியமையாததாதலின் அவ்வாறு கூறினுர். "அவனருளாலே யவன்ருள்வணங்கி" என்றனர் மணிவாசகப் பெருமானுர்.

*தனிமுதல்=ஒப்பற்ற ஆதிகாரணன்.*

*ஈசுவரனே யாவற்றிற்கும் முதற்காரணனாதலால் எல்லா சீவர்களுக்கும் தந்தையாவன். பரையாகிய சத்தியே இரக்ஷிப்பவளாதலின் சீவர்களுக்குத் தாயாவள். ஆதலின் 'தாயும் பிதாவும் சுற்றமும் குருவும் யாவும் நீயும் பரையுமென்றே நிச்சயமா யுணர்ந்தேன்' என்றனர்.*

4. *ஈசுவரனிடத்து அல்லது குருவினிடத்து பக்தி முதிரமுதிர மனம் கரைந்து அன்புருவமாகும். ஆதலின் "துதிப்பார்கள் மனக்கல்லுங் கரைக்கும்" என்றார்.*

*'மௌன' என்றது தமது ஞானாசிரியராகிய மௌனதேசிகரை.*

*ஈசுவரனது அருட்சத்தி தாக்கினாலன்றி ஆன்மாவிற்கு ஞானோதயமும் ஆனந்தானுபவமும் உண்டாகாவாதலின் "உனது கருணை யென்பால் செல்லும்பொழு தல்லவோ செல்லுவேனந்த சிற்சுகத்தே" என்றார்.*

---




## "மோக்ஷத்திற்கு நான் போனால் போகலாம்"

ஒரு காலத்தில் ஞானவிசாரம் செய்துகொண்டிருந்த இருவர் தெருத்திண்ணைமேல் உட்கார்ந்திருந்தபோது "மோக்ஷத்திற்கு நான் போவேன்" என்று ஒருவன் கூற மற்றவன் "இல்லை யில்லை, நான்றான் போவேன்" என்று கூற, இவ்வாறு இருவரும் வாதாடிக்கொண் டிருக்கையில், அச்சமயம் வீதி வழியே ஜலம் எடுத்துச் செல்லும் ஒரு மாது இவர்களுக்குக் கேட்கும் வண்ணம் "மோக்ஷத்திற்கு நான் போனால் போகலாம்" என்று கூறிக்கொண்டு சென்றதாகவும், அவள் மொழிகளைக்கேட்ட இருவரும் மிக்க நாணமும் வியப்பும் அடைந்து, அம்மாதின் பின்னாலேயே அவளது வாசஸ்தலத்திற்குச் சென்று "அம்மையே! நாங்கள் பல வருடங்களாகச் சாத்திர ஆராய்ச்சி செய்தும் எங்களில் யார் மோக்ஷத்திற்குச் செல்வோமென்று தெரியாம லலைகிறோம். அப்படியிருக்கத் தாங்கள் போகலாம் என்று கூறியது எவ்வாறு?" என்று கேட்டதாகவும், அதன்மேல் அம்மாது தான் கூறியதன்

பொருளைத் தெளிவாய் உரைத்ததாகவும் கர்ணபரம்பரையாக ஒரு கதை கூறுவதுண்டு.

இப்போது "மோக்ஷத்திற்கு நான் போனால் போகலாம்" என்று அம்மாது கூறிய வார்த்தைகளில் நான் என்பதற்குப் பொருள் தான் என்பதல்ல. அதாவது அம்மாது தான் வேண்டுமாயின் போகலாம் என்று கூறவில்லை. மற்றபடி என்ன பொருளில் கூறினாளெனில் இயம்புகிறோம். இங்கு "நான் போனால்" என்ற தொடருக்கு "நான் என்கிற அகங்காரம் ஒழிந்தால்" என்பதே பொருளாகும்.

இனி இந்த நான் என்னும் அகங்காரத்தின் தன்மைகளைக் கவனிப்பாம். உலகில் நான் என்ற உணர்ச்சி சகல மனிதர்க்குமுண்டு. அதுவே அகங்காரம் என்பது. இதுவே ஜன்மத்திற்கு வித்தாவது. ஒருவரிடம் இது எவ்வளவு அதிகமாகத் தடித்திருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு அஞ்ஞானம் அதிகமாகும். இந்த அகங்காரம் மூலப் பிரகிருதியின் தமோ குணத்திலுண்டானது. மனதின் ஐந்து குணங்களில் ஒன்றாயிருப்பது. சூக்கும பூதங்களில் பிருதிவி யம்சமானதால் பிருதிவியைப் போன்று கடினத்தன்மையுடையது. இந்த அகங்காரமே கோபம், கடின சித்தம் முதலிய கொடிய குணங்களுக்கு வித்துபோன்றது. இதுவே பரமான்மாவினின்றும் ஆன்மாவை வேறு பிறித்திருப்பது.

அகங்காரமே அறிவை மயக்கி விடுவது. நடுநிலைமையினின்றும் பிறழச்செய்வது. சாதாரணக்கல்வியும், பொருளும் பெரும்பாலும் இந்த அகங்காரத்தை யதிகரிக்கச் செய்கின்றன. இது தூணைத்துரும்பாக்கும், துரும்பைத்தூணாக்கும். அகங்காரமுடையவன் தனக்கு மேற்பட்டவர்களைக்கூடச் சற்றும் இலக்ஷியம் செய்யான். "அவன் எனக்கு எம்மாத்திரம்? என்னை யறியான் போலும். என்னிடமா அவன் ஜபம் செல்லும்? ஆகட்டும் விட்டேனா! அவன் தெய்வபக்தி என்னை அசக்கமுடியுமா?" என்று யாவரையும் அற்பமாக வெண்ணிப்பேசுவான். இந்த அகங்காரம் மிகக் கொடியது என்பதையும் இதன் பூரணசொரூபத்தையும் இதை யெதிரிட்டொழித்த ஞானிகளே நன்றாக அறிவர். மனதின் சொரூபம் இன்னதென்றே யறியாதவர்கள், மனதை யடக்க முயற்சி செய்யாதோர், மனதை வேறு பிரித்தறியச் சக்தியில்லாதோர், வீண் தற்பெருமைக்காக வாவது "என்ன மனம்? மனம்

நாம் எப்படிச் சொன்னால் அப்படிக்கேட்கிறது. நம்மை விட்டா மீறிப்போய்விடும்? நாம் வேண்டுமென்றால் வேண்டும், வேண்டா மென்றால் வேண்டாம். மனம் என்ன இதைக்கட்டாயம் செய் யென்று அடிக்குமோ?..." என்று கூறுவது வழக்கம். ஆனால் மனதை யடக்கமுயன்ற முமுட்சுவுக்கே எல்லாவற்றையும் விட அலையும் மனப்பேயை யகத்தடக்குதல்தான் மிகக் கஷ்டமானது என்ற உண்மை தெரியும்.

ஈசுவரன் ஆன்மாவோடேயே சதா கலந்து நிற்கிறான், அவனை யன்றி ஆன்மா இல்லை என்ற சங்கதியே யுணராதவன், உள்ளிருக்கும் பரம் பொருளை யறிய முயலாதவன், ஈசுவரனிடத் தில் பக்தியைப்பெருக்க வேண்டியதற்கு அவசியமான சரியை யாதிகளைச் செய்யாது, உண்பதும் உறங்குவதுமே ஜன்மமெடுத்த தன் பயன் என்றெண்ணி உலகச்சேற்றில் அழுந்திக் கிடக்கும் அறிவிலி, ஈசுவரனைத்தெரிசிக்கத் திருக்கோயிலுக்குச் செல்லும் ஒருவனைக் கண்டால் "சே சே! அங்கே கோயிலில் என்ன விருக்கிறது. நாம் செய்து வைத்த கல் உருவம், பஞ்சலோக உருவம்தான் இருக்கின்றன. எல்லாம் இங்கே நமக்குள் இருக் கிறது" என்று மார்பைத் தட்டிக்கூறுவது வழக்கம். இத்தகைய மூடர்களைச் சாதாரணமாய் உலகிற் காணலாம். இதுவும் அகங் காரத்தின் செயலேயாகும்.

அகங்காரத்தைப் பற்றித் தாயுமான சுவாமிகள்,

" ஆங்கார மானகுல வேடவெம் பேய்பாழ்த்த
வாணவத் தினும் வலிதுகாண்
அறிவினை மயக்கிடு நடுவறிய வொட்டாதி
யாதொன்று தொடினு மதுவாய்த்
தாங்காது மொழிபேசு மரிகரப் பிரமாதி
தம்மொடு சமான மென்னும்
தடையுற்ற தேரிலஞ் சுருவாணி போலவே
தன்னிலசை யாது நிற்கும்
* * * * * *"

என்ற பாசுரத்தில் நன்கு விளக்கிக்காட்டி யிருக்கிறார்.

'நான்' என்ற அகங்காரமே மற்ற மாயா காரியங்களுக்கும் மூலமாகும். இதனுலே பலவிதத் துன்பங்களும், பிறப்பிற்குக் காரணமாகிய வனைத்தும் உண்டாகும். நினைப்பு மறைப்பும்

எண்ணிக்கையிலடங்காத பல மாயா காரியங்களுமுண்டாகும். இவ்விஷயத்தைப் பற்றி தாயுமானவர்,

"நானென்னு மோரகந்தை யெவர்க்கும் வந்து
நலிந்தவுடன் சகமாயை நானாவாகித்
தான்வந்து தொடருமித்தால் வளருந் துன்பச்
சாகரத்தின் பெருமையெவர் சாற்ற வல்லார்
* * * * * *"

என்ற பாசுரத்திலும், இதை யடுத்த இரண்டு பாசுரங்களிலும் கூறி யருளியதைக் காண்க. இந்த 'நான்' என்ற அகங்காரத்திற்குச் சகோதரன் போல் துணையாக விருப்பது 'எனது' என்ற மமகாரம். இவையே அகப்பற்றென்றும் புறப்பற்றென்றும் கூறப்படும். இவையே பிறவிப் பெரும்பிணிக்கு வித்தாயுள்ளவையாதலின் இவை யொழிந்தாலன்றிப் பிறவி யொழியாது. முத்தி கூடாது.

"யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்" என்றனர் நாயனார்.

"யானென தென்னுஞ் செருக்கொழி யாமையி னெவ்
[வுயிர்க்கு
மீன வகக்கர ணங்குவி யாதுபின் னிச்சைவழி
வானகம் மண்ணகம் பாதல மூன்றினும்மாறிவரும்
யானென தென்செருக் கற்றோர் தொழுங்கச்சி யேகம்
[பனே"
(வள்ளலார்—சிவாகமக்கச்சிமாலை)

இந்த 'நான்' என்பது சவிகற்ப சமாதி வரையில் தொடர்ந்து நிற்கும். ஆண்டு இதையே தற்போத மென்பது. இது ஒழிந்த பின்பே நிர்விகற்ப சமாதியில் ஆனந்தோதயமுண்டாகும். பிறவி வேர் அறும்.

"நானென நிற்கு ஞான ஞானமன் றந்த ஞானம்
மோனமா யிருக்க வொட்டா மோனமின் றாகவே தான்
தேனென ருசிக்கு மன்பாற் சிந்தனைந் தூருகும்
[வண்ணம்
வானென நிறைந் தானந்த மாகடல் விளைவ தின்றே"
[என்றும்,

" நீயற்ற வந்நிலையே கிட்டையதில் நீயிலையோ
வாயற் றவனே மயங்காதே—* *" என்றும்,
தாயுமானவர் அருளினர்.

அந்த நான் என்ற தற்போத மொழிந்த நிலையே இரண்டற்ற அத்துவித நிலையாகும். இதையே மாணிக்கவாசகர் "அப்பா செத்தே போயினேன்" என்றும், "சென்று சென்று தேய்ந்து தேய்ந்தொன்ரும் திருப்பெருந் துறை யுறை சிவனே" என்றும், பட்டினத்தடிகள் "செத்தாரைப் போலே திரி" என்றும், "தூங்காமற்றூங்கி" என்றும் கூறியருளினர்கள்.

பிறவிக்கு வித்தாகிய இத்தகைய 'நான்' என்ற அகங்காரம் ஒழிக்கத்தக்கதே யென்பது நன்கு விளங்குகிற தன்றோ-அனுதியாகிய இது ஒழியுமோ? எப்படி யிதை யொழிப்பது? எனின், அநாதியாயினும் இது ஒழியும். இதை யனுபவமா யொழித்த நம் முன்னோராகிய மகான்கள் இதை யொழிக்கும் மார்க்கத்தை யருளியே யிருக்கிறார்கள். நம் முன்னோர் போல் தம் சந்ததியார்க்கும், ஏன், உலகில் அனைவர்க்குமே, என்று மழியாத பரமானந்த பொக்கிஷத்தை வைத்தவர்கள் உலகில் வேறு யாருமிலர் என்று திட்டமாய்க்கூறலாகும்.

இந்த அகங்காரம் அநாதியாயினும் செயற்கையே யன்றி யியற்கை யன்று. ஆன்மாவிற்கு ஆனந்தம் அநாதி யியற்கை. ஆணவம் அல்லது அஞ்ஞானம் அநாதி செயற்கை. செயற்கை யொழியும்; இயற்கை யொழியாது.

இந்த அகங்காரம் அல்லது ஆணவம்கூடியே ஆன்மாவைப் பரமான்மாவினின்றும் பிறித்து விட்டது.

" அறிவுரு வாயவென்னை யாணவ மாதி கூடிப்
பிறிவறி யாதநின்னைப் பிறித்துத் தான் முழுதுமாகி
நெறியினை மறைத்துப் பொல்லா நீசருக் கடிமையாக்கிச்
செறியிரு ணின்றதென்னே திருப்புலி வனத்துளானே"
(வள்ளலார்)

இத்தகைய 'நான்' என்ற அகங்காரம் நீங்குவ தெவ்வாறெனின், ஞானத்தால் நீங்கும். இதைப்பற்றி விரிவாய்க்கூறின் அதுவே ஒரு நூலாகும். ஆதலின் குறிப்பாய்க் கூறி இதை முடிக்கிறோம்.

இந்த "நான்" தேகாதி இந்திரியங்கள் கரணங்களோடு

கூடி, நான் கர்த்தாபோக்தா, நான் சொர்க்க நரகங்களை யனுபவிப்பவன் என்று எண்ணி யிருப்பது. உண்மையில் இந்த 'நான்' நாமல்ல—மயக்கத்தால் இதை நாமென்றெண்ணி யிருக்கிறோம் எப்படி யெனில், ஒரு பிராம்மணன் திடீலென்று மூளையிலுண்டான ஒரு கெடுதியால் இறந்த காலம் யாவும் மறந்து, தான் புலையன் என்று எண்ணிக்கொண்டு பறைச்சேரியில் போய் வசிப்பது போல்.

ஒரு வைத்தியன் அவனுடைய மூளையிலிருக்கும் குற்றத்தை நீக்கி விட்டால் உடனே அவனுக்குப் பழைய நினைவு வந்துவிடும். அப்போது "அடடா! நாம் பிராம்மணனாயிற்றே! இதென்ன அனுசாரம்!" என்று பதைபதைத்து சேரியை விட்டோடிப் பிராயச்சித்தம் செய்துகொள்வான்.

அது போன்றே, குரு உபதேசத்தால் உண்மையான 'நான்' என்கிற ஆன்மாவைத் தரிசித்தால் அஞ்ஞானம் நீங்கி விடும். நான் என்ற அகங்காரமும் எனது என்ற மமகாரமும் ஒழியும். ஏனெனில் சாக்ஷி மாத்திரமா யாகிய ஆன்மசொரூபமே நாமென்றுணர்ந்ததே "நாமரூபமாகிய எவற்றோடும் நமக்குச் சம்பந்தமில்லை. நாம் சச்சிதானந்த சொரூபம், இவை அநிர்த ஜடதுக்கம்" என்று விளங்கி விடும். அதன்மேல் ஆன்மா பரமான்மாவில் இலயமடையும். முடிவில் 'நான்' என்ற கிஞ்சித் இருப்பாகிய தற்போதமும் அகண்டாகாரத்தில் இலயமாக ஆன்மா பிறப்பிறப்பற்ற நித்தியானந்த மாகிய முத்தியடையும்.

ஆதலின் மெய்யான 'நான்' என்கிற அறிவு சொரூபமாகிய ஆன்மாவை யறிவதே 'நான்' என்ற அகங்காரத்தை யொழிக்கும் மார்க்கமாம். அது ஒழிந்தால் முத்திசித்திக்கும். பகவான் நமக்கு இம்மனிதப்பிறவியை யளித்தது தன்னை யடையவேயாதலால் ஒவ்வொருவரும் அகங்காரத்தை யொழித்துத் தன்னை யறிய முயலவேண்டும். அச்சிந்தனை யில்லையேல் நமக்கும் மிருகபட்சியாதிகளுக்கும் பேதமின்றாம்.

ஓம் தத்ஸத்.

---

## கல்வி.

ஆங்கிலத்தில் கல்வி (Education) என்ற சொல்லுக்கு "வெளியில் இழுத்தல்" (Drawing out) என்பது பொருள். சுமார் 2300 வருடங்களுக்கு முன்பு கிரேக்க தேசத்தில் மிக்க புகழ்பெற்று விளங்கிய தற்காலத்

தும் எல்லோராலும் போற்றப்படும் எதன்ஸ் நகரவாசியாகிய தத்துவாசிரியார் சாக்ரடீஸ் "கற்றல் நினைவிற்குக் கொண்டுவருதே" (Learning is only Remembrance) என்று கூறியுள்ளார். இக் கூற்றுகளின் பொருளையும் உண்மையையுங் கவனிக்குங்கால் மனிதனுக்கு இப்பிறப்பிற்கு முன் பிறவிகள் இருந்திருக்கவேண்டுமென்று தெரியக் கிடக்கின்றது. வாஸ்தவத்தில் சாக்ரடீஸின் பிரதம சிஷ்யனை பிளேடோ தன் புத்தகம் "பீடோவில்" (Phaedo) மனிதன் இதற்குமுன் ஜன்மங்கள் எடுத்திருக்க வேண்டுமென்று அபிப்பிராயப்படுகின்றார். முற்பிறவி இல்லை யென்று ஒப்புக்கொள்ளுங்கால் "வெளியில் இழுத்தல்", "கற்றல் நினைவிற்குக் கொண்டுவருதலே" என்ற மொழிகளுக்குப் பொருளில்லாமல் போகின்றது. ஒன்று இப்பதங்களுக்கு அர்த்தமில்லை என்றாகிலும் அல்லது மனிதன் பல ஜன்மங்கள் எடுத்திருக்க வேண்டுமென்றாகிலும் கொள்ளுதல் வேண்டும். இரண்டாவது பொருளைக் கொள்வதே அறிவிற்கு அழகும் உண்மையுமாம்.

"கற்றல் நினைவிற்குக் கொண்டுவருதலே" என்பதின் பொருள். மனிதன் ஏதோ ஒன்றை அறிந்திருந்தான்; எக்காரணத்தாலோ அதை மறந்தான்; அவனது கடமை அதை மறுபடியும் உணர்தலே என்பதாம். இந்துக்கள், மனிதன் கடவுள்தன்மையாக இருக்கிறான்; (தத்துவமஸி என்ற மகா வாக்கியத்தின் பொருளை இங்கு நோக்குக) இருந்தபோதிலும் எக்காரணத்தாலோ அவன் தன்னை மறக்க நேரிட்டது; அவன் கடமை மறுபடியும் தன்னை யறிதலே, என்று கூறுகின்றார்கள். இவைகளினின்றும் மறந்ததை யறிவதே கல்வியின் நோக்கமென்று பெறக் கிடக்கின்றது. பொய்யாமொழிப் புலவர் கடவுள் வணக்கங் கூறுமிடத்து கல்வியின் நோக்கம் இறைவன் திருவடிகளைத் தொழுதலேயாம் என்றார்.

"கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவ
நற்றா டொழாஅ ரெனின்"

எவ்வாற்றானும் கல்வியின் நோக்கம் யாதென்று யோசிக்குங்கால் மறந்த உண்மையை யறிதலே, இறைவனைத் தொழுதலேயாம்.

இவ்விஷயத்தைப் பண்டைக்காலத்தில் நம் முன்னோர் நன்குணர்ந்திருந்தார்கள். ஆனால் நாம் இதை அதிகமும் மறந்திருக்கிறோம். அப்போது கல்விச்சாலைகள் சன நெருக்கமில்லாத கிராமங்களிலும், இயந்திரப் புகையினால் பீடிக்கப்படாத நகரங்களின் சுற்றுப்பக்கங்களிலும், நீண்டு ஓங்கி வளர்ந்த மரங்களடர்ந்த சோலைகளிலும், மான் மயில் போன்ற பிராணிகள், பறவைகள் சஞ்சரித்த அடவிகளிலும் ஆடம்பரமில்லாமல் மிக்க உபயோகத்துடன், வனப்புடன் பொலிந்தன. அவைகளைப் போன்றது இப்போது வங்காளத்தில், கல்கத்தாவிற்குச் சமீபத்தில் போல்பூரில் திருவாளர் ரபீந்திரநாத் தாகூர் பெருமானார் ஏற்படுத்திய "சாந்திநிகேதன்" ஒன்றுமட்டுமே திகழ்கின்றது. ஆனால் இது ஒன்று நீங்கலாக மற்ற கலாசாலைகளை நினைக்கும்போது என்ன வேற்றுமைத் தோன்றுகின்றது? இப்போது அவை

கள் இயற்கைப் பொருளழகு சற்றுமில்லாததும், புகையினுல் அசுத்தப்படப் பெற்ற காற்றுள்ளதும், சனக்கூட்டங்கள் நெருக்கமுள்ளதும், கூச்சலினுல் அதிகமும் துன்பம் பெறப்பட்டதுமான நகரங்களின் நடுவே அமைக்கப் பெற்று இருக்கின்றன. உதாரணம்:—சென்னை கிறிஸ்துவ கலாசாலை, பச்சையப்பன் கலாசாலை முதலியன.

இயற்கைப் பொருள்கட்கும் கல்விக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது என்று ஒரு சந்தேகம் ஏற்படலாம். சோலை, கடற்கரை யோரம், ஆற்றின் கரை, மலைச்சாரல் முதலிய இடங்களில் மனம் பரந்ததன்மை, சுத்தம் ஊக்கம், ஆழ்ந்ததன்மை, அமைதி முதலிய நற்குணங்களை யடைகிறது. ஆனுல் அதே மனது இயற்கைப் பொருளழகு இல்லாத நகரங்களிலும் நாடு களிலும் குறுகியதன்மை, சுயநலம் பாராட்டல், குழப்பம் முதலிய துர்க் குணங்களைப் பெறுகின்றது. இதுபற்றிதான் இங்கிலாந்தில் சீமான்கள் அடிக்கடி நகரங்களிலிருந்து நாட்டுப்புறங்களுக்குச் சென்று சிறிதுகாலம் தங்கிவருகிறுர்கள். நம் நாட்டிலும் கவிகளும், துறவிகளும் இதுகாரணம் பற்றி மலைகளிலும் காடுகளிலும் வாசஞ்செய்து வருகிறுர்கள். உபநிஷத்து களில் கூறியுள்ள அரிய பெரிய உண்மைகள் எவ்விடங்களில் அறியப்பட் டனவென வுன்னுந்தோறும் இவ்விஷயம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும். இது அநுபவத்தில் தோன்றும். ஆதலான் இயற்கைப் பொருள் களுக்கும், மனவமைதி முதலான மேலான குணங்களுக்கும் அதன் காரண மாக கல்விக்கும்—இவைகள் ஒவ்வொன்றிற்கும்—நெருங்கிய சம்பந்தமுண் டென்பது தெற்றெனப் புலப்படுகிறது. இதையறிந்தால் இப்போது கல்வி பயிலு மிடங்கள் சற்றேனும் பொருத்தமில்லாதன வெனத் துணிதல் சுல பம்.

இரண்டாவதாக இறந்தகாலத்தில் எவ்வெவைகளைப் பயின்று வந்தார் கள், தற்காலத்தில் எவ்வெவைகளைப் படித்து வருகிறேும் நாம் என்பதைச் சிறிது பார்ப்போம். மனிதனுடைய ஒவ்வொரு காரியமும் மதசம்பந்தத் தை யொட்டியதாகவும், அதற்குக் கீழ்ப்படிந்துள்ளதாகவும் இருத்தல் அவ சியம். ஆதிகாலத்தில் இப்படியே இருந்துவந்தது. ஆனுல் இப்போது உலோகாயத நாகரீகத்தைப் பின்பற்றி மனிதன் தன் சுயநல காரியங்களை முதன்மையாகவும், மத விஷயங்களை இரண்டாவதாகவும், சிற்சில சமயங் களில் தனக்கும் அவைகளுக்கும் சம்பந்தமில்லாமலும் செய்துகொண்டான். இம்மாறுதலால் நேரிடும் கெடுதிகள், துன்பங்கள் பல. உலகத்திலுள்ள குழப்பங்களுக்கெல்லாம் காரணம் இவ்வுண்மையை மறந்ததே. பிரமசரியம், கிரகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் ஆகிய நான்கு ஆசிரமங்களை இது பற்றித்தான் உண்டுபண்ணிவைத்தார்கள் நம்முன்னேராகிய மகான்கள். மதவிஷயமான படிப்பும், தத்துவ நூல்களும் ஆங்காங்கே கற்பித்து வந்தார் கள். உலக விஷயங்களைப் பற்றி அவ்வளவு போதுமான முயற்சி இந்தியர் கள் எடுத்துக்கொள்ளவில்லை; எடுத்துக்கொண்டிருந்தால் இவர்களும் மேல்

நாட்டார்களைப்போலவே இயந்திரங்களையும் மற்றும் நூதனப் பொருள்களையும் அவர்களைவிட அதிகமாகவே கண்டுபிடித்திருக்கக்கூடும். ஆனால் அவர்கள் அடியோடு இவைகளைக் கவனிக்காமல் விட்டுவிடவுமில்லை. இதைப் பற்றி கணிதநூல், சிற்பநூல், வைத்தியநூல் இவைபோன்ற நூல்களைக் காணுங்கால் உண்மை விளங்கும். அவர்கள் அறிந்தது ஒன்றே. அது மத விஷயத்தை முதன்மையாகவும் மற்றைய காரியங்களை இரண்டாவதாகவும் கவனித்தலே. நாம் சனனமெடுத்தது பரம்பொருளைச் சேரவே என்பது நம்முன்னோர்கொள்கை. நாம் இதை அவசியம் போற்றுதல் வேண்டும். பள்ளிக்கூடங்களிலும் கலாசாலைகளிலும் இதை வற்புறுத்திக் கூறுதல் நலம்.

இதை மறவாதிருந்த சென்ற காலத்து ஆசிரியர்கள், தேகவன்மை, வீரம், தெய்வபக்தியோடுங் கூடிய சிங்க ஏறுகளாகிய உத்தமமானவர்களை உலகில் அனுப்பி வந்தார்கள். இப்போது நோயினால் பீடிக்கப்பட்ட, வீரங் குன்றிய, தெய்வமுண்டோ இல்லையோவென ஐயத்தோடுங்கூடிய கவர்ன்மென்டு குமஸ்தாக்களாகமட்டுமே உபயோகப்படக்கூடிய பிள்ளைகளைக் கல்விச்சாலைகள் உண்டுபண்ணி விடுகின்றன. என்ன பேதம்!

நிகழ்காலத்தில் கல்வி மேனாட்டுப் படிப்பை யொட்டி நடப்பதாக இருக்கிறது. இது மகா கெடுதி விளைவிக்கக்கூடியது; விளைவித்தும்விட்டது; இன்னும் செய்துகொண்டும் வருகிறது. ஒவ்வொரு நாடும் அததற்கேற்றதாகவே சௌகரியங்களைச் செய்துகொள்ளல்வேண்டும். இதைவிட்டு, மற்றைய நாடுகளைப் பார்த்து, குரங்கைப்போல், காரியங்களைச் செய்துவந்தால் கேடுறுவதற்கு வழியைத் தேடிக்கொள்வதேயாகும். இதனால் புறத்தேயங்களிலிருந்து ஒன்றையும் கற்றுக்கொள்ளக்கூடாதென்பது நம் கருத்தென்று கருதலாகாது. எப்படி ஒரு மரமானது தனது சீவியத்திற்கும், வளர்ச்சிக்கும் தன்னிலும் வேறான சூரிய கிரணங்களையும், தண்ணீரையுமுட்கொண்டு அவைகளைத் தானேயாகச் செய்துகொள்ளுகிறதோ, அப்படியே நாமும் மற்றைய நாடுகளிலிருந்து நமக்கு அவசியமானவற்றைக் கற்றுக்கொண்டு அவைகளை நம்முடையவையாகவே அமைத்துக்கொள்ளுதல் வேண்டும். இதனால் கெடுதி ஒருகாலும் ஏற்படாது. சுகமே உண்டாகும். கண்டனஞ் செய்வதெல்லாம் கண்மூடித்தனமாக மற்றவர்களை யொட்டி யொழுகல் கூடாதென்பதே. முக்கியமாக கல்வியில் இதை மறவாதிருத்தல் அவசியமாய் வேண்டப்படுகிறது.

ஆனால் சென்றவைகளை யெல்லாம் பிறப்பிக்க வேண்டுமென்பது நதியின் முகத்துவாரத்திற்குச் சென்ற வெள்ளத்தை மறுபடி உற்பத்தி ஸ்தானத்திற்குக் கொண்டு செல்ல முயல்வதை யொக்கும். சென்றது சென்றதுதான். சென்றதைப்பற்றி வருத்தப்படுவதில் பயனில்லை. ஆனால் ஒருவன் அல்லது ஒரு நாடு முன்னேற்றமடைய சென்றகாலத்தையும், நிகழ்காலத்தையும், வருங்காலத்தையும்பற்றி மிக்க சாக்கிரதையாக இருத்தல்வேண்டும். சென்றதைக்கொண்டுதான் இப்போது காரியங்களைச் சாதிக்கக்கூடும்;

நிகழ்காலத்தில் அவைகளைச் செய்வதற்கேற்ப வருங்காலத்தில் விஷயங்கள் கைகூடும். ஆனதுபற்றி முக்காலங்களையும் ஒரே நோக்காக மனிதன் தெரிதல் நன்மை பயக்கும். ஒன்றை இங்கு மறத்தலாகாது. எப்போதும் உயிரைக் குரங்குப் பிடியைப்போல் பற்றிக்கொண்டு, உடம்பை மாற்றவேண்டிய காலங்களிலெல்லாம் வேறாகச் செய்துகொண்டே வர வேண்டும்.

கல்வியில் இவ்வுண்மையை முக்கியமாகப் போற்றின் அதிக பயன் விளையும். பண்டைய குருகுலவாசப் படிப்பை முழுமையும் அனுஷ்டானத்தில் இப்போது கொண்டுவருதல் அசாத்தியம். ஆனால் இருக்குங் குறைகளை நீக்கிக் கல்வியை நாட்டிற்கேற்றவாறு அமைத்தல் நலம்.

முதன்மையாக கலாசாலைகளில் பாடங்களை ஆங்கிலத்தில் கற்பித்துக் கொடுப்பது கெடுதியாகும். அவரவர்களுடைய பாஷைகளில் பாடங்களைப் படிப்பித்துக்கொடாமல் ஏன் அன்னியபாஷையை உபயோகப்படுத்த வேண்டும்? இம்மாதிரியான மாறுபாடுள்ள முறை உலகத்தில் எங்கேயாவது உண்டாவென்று பார்த்தால் இல்லவே இல்லை என்று தெரியவருகிறது. ஆங்கிலேயர்கூட அவர்கள் பாஷையிலேயே பாடங்களைக் கற்கின்றனர். இம்முறை கேட்டால் அவரவர்கள் தங்கள் தங்கள் பாஷைகளைக் கற்க அவகாசமில்லாமல் போகின்றது. மேனாட்டார் அவர்கள் மொழியை முதலாவது செவ்வனே தெரிந்துகொண்டு பிறகு கிரேக்க, லத்தீன் முதலிய மொழிகளை அறிகின்றார்கள். ஆனால் நம் நாட்டில்மட்டும் இம்முறைகேடான தலைகீழ் பாடமான காரியம் நடந்துவருகிறது. கல்வி ஆங்கிலத்தில் படிப்பித்துக் கொடுக்கும் வரையில் நாடு க்ஷேமமடையாது. ஹைஸ்கூல்களிலும், கல்லூரிகளிலும் பாடங்களை அவரவர்கள் மொழிகளிலேயே போதித்தல் வேண்டும்.

ஆனால் ஆங்கிலம் கற்கக்கூடாதென்பது நமது அபிப்பிராயமல்ல. அம்மொழி உலகிலுள்ள மேலானவைகளில் ஒன்று. அதில் மிகவும் அருமையான பொருள்கள் பொதிந்து கிடக்கின்றன. அதைக் கற்றவனொருவன் எந்நாட்டிலும் அதிக கஷ்டமின்றி சுற்றிவரலாம். தவிர, தற்காலத்தில் அது இராஜமொழியாக இருந்து வருகிறது. இவ்வளவு சிறப்பும் உபயோகமுமுள்ள மொழியை எவன்தான் கற்கவேண்டாமென்று கூறத்துணிபுறுவான்? சொல்வதெல்லாம் "மாதா வயிறெரிய மகேஸ்வரபூஜை" என்பதற்கிணங்கத் தன் தாய்மொழியைச் செவ்வனே கற்காமல் அலட்சியம் செய்துவிட்டு ஆங்கிலத்தைக் கற்கலாகாதென்பதே.

இரண்டாவதாக கல்விச்சாலைகளில் நம் தேச சரித்திரத்தைக் கற்பித்துத் தருவதில்லை. கீழ்வகுப்புகளில் இச்சரித்திரங்களைச் சிறிது படிப்பித்து வருகின்றார்கள். அங்கே பிள்ளைகள் அவைகளைப் படிப்பது ஹரிச்சுவடி கற்பதை நிகர்க்கும். மேலும் அவைகள் நம் நாட்டாரால் எழுதப்பட்டவையல்ல. அவைகளில் சிற்சில விடங்களில் உண்மைக்கு விரோத

மான விஷயங்களை எழுதியுள்ளார்கள். உதாரணமாக கல்கத்தா இருட்டறை. இதைப்பற்றி மாறான அபிப்பிராயம் ஏற்பட்டிருக்கிறது. ஆனால் ஆங்கில சரித்திர ஆசிரியர்கள் அதை நடந்ததாகவே கூறுகின்றார்கள். சிவாஜீ மகாராஜனைப்பற்றி அநேக அவதூரான கதைகளைக் கட்டிவைத்திருக்கிறார்கள். ஔரங்கசீப் சக்ரவர்த்தியின் குணத்தை அதிக குரூரமாயும் கேவலமாயும் அயல்நாட்டு சரித்திர ஆராய்ச்சிக்காரர்கள் வரைந்திருக்கின்றார்கள். அவர்கள் தம் சுயநலங்கருதியே நடுநிலையை மறந்து அவ்வாறு வரைந்தனர். இவைகளைப்பற்றி நம் தேச சரித்திரம் வரைவோர், சர்க்கார் முதலியோருடைய கூற்றுகளை நோக்கின் உண்மை நன்கு புலப்படும். தவிர, 8-வது 9-வது வகுப்புகளிலிருந்து அநேகருக்கு இந்திய சரித்திரம் இன்னதென்பதே தெரியாது. தேசசரித்திரங்களை விருப்போடு எடுத்துக் கொள்ளுவோருக்கு ஆங்கிலதேச சரித்திரத்தைத்தான் போதித்து வருகிறார்கள். 10-வது வகுப்பில் இந்தியநாட்டைப்பற்றி ஏகதேசமாக சில பாகத்தைப் போதிக்கின்றார்கள். இன்டர்மீடியேட் வகுப்புகளில் கிரேக்க தேச சரித்திரம், உரோமாபுரி சரித்திரம், ஆங்கிலசரித்திரம் மாணவர்கள் பயின்று வருகிறார்கள். ஆனால் இந்திய சரித்திரத்தைப்பற்றி ஒன்றுமே கிடையாது. பீ.ஏ., (B.A.,) வகுப்புகளில் சிறிது அதைப் படிக்கிறார்கள். இந்நிலைகேடான காரியம் மாறுதல் அடையவேண்டும். இந்தியனாய்ப் பிறந்த ஒவ்வொரு மாணவனுக்கும் இந்திய சரித்திரத்தைப் பூராக கட்டாய பாடமாக வைத்து எல்லா வகுப்புகளிலும் கற்பித்துத்தர அதிகாரிகள் தக்க வசதிகள் ஏற்பாடு செய்து தருதல்வேண்டும். தவிர, இந்திய சரித்திரங்கள் இந்தியர்களால் எழுதப்படவேண்டும்.

மற்றொன்றை இங்கு வரைவது நலம். கல்லூரிகளில் மாணவர்கள் மேனாட்டு தர்க்க தத்துவ நூல்களைப் பயிலும்படி செய்துவருகிறார்கள். நம் நாட்டுத் தர்க்க நூல்களையும் தத்துவ நூல்களையும் கற்பிக்கின்றார்களில்லை. ஏன், நம் நாட்டில் அவ்வகையான நூல்களில்லையா? ஆறுவிதமான தத்துவங்களும் மேலான தர்க்கங்களும் இல்லையா? ஆகலான் அவைகளை முதன்மையாக சிரத்தையோடு பயிலுதல் அவசியம். பிறகு அயல்நாட்டின் நூல்களைத் தெரிந்துகொள்ளுதல் மிக்க நன்மை பயக்கும். இம்மாதிரியே பௌதீக, வான, ஜோதிட முதலிய சாஸ்திரங்களைத் தெரிந்துகொள்ளுதல் வேண்டும்.

மிகவும் முக்கியமான விஷயம் ஒன்றை மறத்தலாகாது. எந்நாடும் செழித்தோங்கக் கைத்தொழில் அல்லது தொழில் அபிவிருத்தி வேண்டும். வெறும் அறிவை வளர்த்தல் போதாது. அறிவோடு வயிற்றையும் கவனித்தல் இன்றியமையாதது. இதில் மிக்க அஜாக்கிரதையாக இருந்ததால்தான் நாடு மிக்க தாழ்ந்த ஸ்திதியில் கிடக்கிறது. இதனாற்றான் மாணவர்களிப்போது வெறும்படிப்பை வைத்துக்கொண்டு வேலையில்லாமல் வேறு பிழைப்

பதற்கும் வழிதெரியாமல் திண்டாடுகின்றனர்கள். பாடசாலைகளில் ஏதாவது ஒரு கைத்தொழிலைக் கற்றுக்கொடுத்தால்தான் நன்மை உண்டாகும்.

ஜப்பான் சில வாண்டுகளுக்குமுன் இருந்த விடமே யாருக்குந் தெரியாது. ஆனால் அது இப்போது உலகத்திலுள்ள முதன்மையான நாடுகளில் ஒன்றாயிருக்கிறது. காரணம் யாதெனை யோசிக்குங்கால் அங்கு மாணவர்களை வெளிநாடுகளுக்கு அனுப்பி பல துறைகளிலும் பயின்றுவர ஏற்பாடு செய்துவருகிறார்கள். எல்லாத் தேசங்களும் முன்னே சென்றுகொண்டிருக்க நாம் சும்மா விருந்த விடத்திலேயே இருக்கமுடியாது. அப்படி இருக்க நினைத்தல் தற்கொலை புரிந்துகொள்வதேயாகும். மற்றைய நாடுகளோடு நம் தேசமும் சமத்துவத்தை யடைதல்வேண்டும். ஆகையால் நம் நாட்டிலிருந்து பிள்ளைகளை இங்கிலாந்து, ஜெர்மனி, அமெரிக்கா முதலிய தேசங்களுக்கு அனுப்பி, பல்வேறு தொழில்களையும் கல்விகளையும், வியாபாரங்களையும் கற்றுவரத்தக்க முயற்சி உடனே யெடுத்துக்கொள்ளுதல் நலம். தனவந்தர்கள் இவ்விஷயத்தில் மிகவும் ஊக்கம் எடுத்துக்கொள்வது அதிக பயன்தரும். பணத்தை வீண் வழிகளில் செலவு செய்யாமல் இந்த மார்க்கத்தில் பயன்படுத்தி வரவேணும். இப்போதுதான் சிற்சிலர் மேனாடுகளுக்குச் சென்று வருகிறார்கள். இது போதாது. அநேகர் செல்லல் வேண்டும்.

எந்நாட்டிற்குச் சென்றாலும், எத்தொழிலைச் செய்தாலும், எப்படிப்பைக் கற்றாலும் ஓர் உண்மையைமட்டும் மறக்கலாகாது. ஒவ்வொரு தேயமும் ஓரோர் உண்மையை உலகத்திற்குப் போதிக்கவே தோன்றியிருக்கிறது. ஒரு நாட்டின் வேலையை மற்றொன்று செய்ய முயலலாகாது; முயன்றாலும் வெற்றிகிடைக்காமல் வீணாய்ப்போய்விடும். இவ்வுண்மையை எந்நாடு மறக்கின்றதோ அந்நாடு சாக்காடுறுவது திண்ணம். இறந்தகாலத்து கிரேக்கதேயம் தத்துவத்தையும், சிற்ப நூலையும் இவைபோன்ற அறிவிற்குப் பயன்படக்கூடிய விஷயங்களையும் புவிக்குத் தந்தது. உரோமாபுரி ஒரு நாட்டை எப்படி யாள்வது, நாடுகளை எப்படி ஜெயிப்பது, மற்றவர்களை எப்படி அடக்கியாளத் திறமைகொள்வது முதலிய நுண்ணிய பொருள்களைத் தெரிவித்தது. இதேமாதிரி நம் நாடும் ஏதோ ஒரு உண்மையை தெரிவித்திருக்கவேண்டும். அதாவது மத உண்மையே. ஆனால் இந்நாட்டிற்கும் பிற நாடுகளுக்கும் ஒரு வித்தியாசம் உண்டு. மற்றவைகள் உலக சம்பந்தமானவைகளைத் தெரிவித்தபடியால் சிறிதுகாலம் இவ்வுலகத்தின்கண் தோன்றிப் பின்பு மறைவுற்றன. ஆனால் நம் நாடு சாக்காடின்றிய மதவுண்மையைத் தெரிவித்தபடியால் இன்னும் அழிவுறாமல் திகழ்கின்றது. எக்காலத்தில் இது இதை நிறைவேற்றப் பின் வாங்குகிறதோ அதேகாலத்தில் அழிதல் நிச்சயம். ஆகலான் "எத்தொழிலைச் செய்தாலும், எதவஸ்தைப் பட்டாலும்" மீன்பிடிக்கும் செம்படவனுக்குத் தூண்டில் முள்ளின்பேரிலேயே கவனமிருக்குமாபோல் ஒவ்வொரு இந்திய ஆண்மகனும் பெண்மணி

யும் மதத்தை நோக்கமாகவும், அடிப்படையாகவும் வைத்துக்கொண்டு காரியங்களைச் செவ்வனே செய்துவந்தால் நாடு சீரும், சிறப்பும், செழிப்புமுற்று ஓங்கிவளர்ந்து தன் மணத்தை உலகமெங்குங் கமழச்செய்யும். இவ்வுண்மையை அஸ்திவாரம் போடுவதற்குத் தகுந்த இடம், காலம், பொருள் முறையே கலாசாலை, இளமை, கல்வியாகும்.

V. T. M. திருநாவுக்கரசு, வேலூர்.

குறிப்பு:—நமது நண்பர் நமது மாணவர்களை இங்கிலாந்து, அமெரிகா, ஜர்மெனி முதலிய நாடுகளுக்கனுப்பி பலவிதத் தொழில்களையும் சாத்திரங்களையும் கற்றுவரும்படிச் செய்தால்தான் ஜபானைப்போல் நம் நாடு முன்னேற்றமடையும் என்கிறார். இது உண்மையே. ஜபானிலிருந்து மாணவர் மேல்நாடுகளுக்குச் சென்று பல தொழில்களையும் சாத்திரங்களையும் கற்றுத் தாய்நாட்டிற்குத் திரும்பிவந்தபின் அச்சாத்திரங்களைத் தாய்ப்பாஷையில் மொழிபெயர்த்து, நாட்டில் அவற்றிற்கென பாடசாலைகளைத் தாபித்து யாவர்க்கும் கற்பித்து, பிறகு தொழிற்சாலைகளைத் தாபித்துத் தங்களுக்கு வேண்டிய யாவற்றையும்—கப்பல்கள், போர்க்கப்பல்கள், யுத்தாயுதங்கள்கூட—தாங்களே செய்துகொள்ளத் தொடங்கி செல்வமும், மதிப்பும் பெற்றார்கள். அத்தகைய பெருங்காரியத்தை அத் துரைத்தனத்தாரே முன்னின்று செய்யத்தொடங்கினார்கள். ஏனெனில் ஜனங்களும் துரைத்தனமும் அங்கு ஒன்றே.

நமக்கு யார் அப்படிச் செய்கிறவர்கள்? நமது துரைத்தனத்தாரோ அன்னியநாட்டார். முதலாவது தங்கள் நாட்டார்க்கு வரும்படி குறைவதாயின் அத்தகைய விவகாரங்களை (நமக்கு நன்மை பயக்குவதைக் கருதி மட்டுமே) நாம் செய்யும்படி விடமாட்டார்கள். எவ்விதத்தாலேனும் தடுத்துவிடுவார்கள். நமது கைகால்கள் கட்டப்பட்டு வாய்க்கும் பூட்டிடப்பட்டிருக்கிறது. நமது நிலைமை மிகப் பரிதாபகரமானது.

இனி ஏதோ சில சாதாரணக் கைத்தொழில்களைமட்டுமேனும் கற்றுவரச் செய்வோமெனின் தரித்திரம் குறுக்கே நிற்கிறது. நம் நாட்டுச் செல்வவந்தர்க்கோ அத்தகைய வழியில் பணம் செலவிட மனம் திரும்பவில்லை. சுயநல நாட்டமே அதிகமாயிருக்கிறது. பெருமைக்கும் பட்டத்திற்கும் வேண்டுமென்றால் அதிகாரிகளுக்கு ஆயிரக்கணக்காய்ச் செலவழிப்பார்கள். இன்றேல் தேச நன்மையைக் கருதி அதற்கென ஒரு நிதி சேகரம் செய்து வருடத்திற்கு இரண்டொரு மாணாக்கர்களையேனும் மேல்நாடுகளுக்கனுப்பி அவசியமான தொழில்களைக் கற்றுவரச்செய்து, பிறகு தாய்ப்பாஷையில் அவற்றை இங்குள்ளவர்க்குக் கற்பித்து தொழிற்சாலைகளைத் தாபித்து நடத்தலாகும். அவ்வாறு செய்யின் சீக்கிரத்தில் முன்னேற்றமடைய வழியேற்படும்.

இனி "இப்போதுதான் சிலர் மேல்நாடுகளுக்குச் சென்று கல்வி கற்றுவருகிறார்கள்" என்று நமது நண்பர் கூறுகிறார். உண்மைதான். ஆனால்

இவர்களால் தாய்நாட்டிற்கு எவ்வளவுவரை நன்மையுண்டாகுமென்பதைப் பார்ப்போம்.

இப்போது இங்கிலாந்து முதலிய இடங்களுக்குச் சென்றுவருவோர் பாரிஸ்டர், அட்டர்னி, இத்தகைய பரீட்சைகள் கொடுத்துவிட்டு இங்கு வந்து வக்கீல் வேலை செய்கிறார்கள். இரண்டொருவர் மின்சார இஞ்சினீயர், எந்திர இஞ்சினீயர் முதலிய வேலைகளைக் கற்றுவந்து இந்நாட்டிலுள்ள அன்னிய நாட்டாரின் தொழிற்சாலைகளில் போய் அடிமைவேலைசெய்ய அமர்ந்துகொள்கிறார்கள். இவர்கள் கொஞ்சம் அதிகபணம் சம்பாதிப்பதையன்றி, இவர்களால் யாருக்கென்ன பயன்? நாட்டிற்கு ஒருபயனுமில்லை.

ஒரு விஷயத்தில் இவர்களால் நாட்டிற்கே பெருந்தீங்கு விளைகிறதென்று கூறவேண்டியிருக்கிறது. எவ்வாறெனின், இவர்களில் பெரும்பாலோர் அன்னிய நாட்டிலிருந்து திரும்பிவரும்போது நிறம் தவிர மற்ற எல்லாவற்றிலும் ஐரோப்பிய துரைகளாகவே மாறி வருகிறார்கள். நிறத்தை மாற்றிக்கொள்ள வழியிருந்தால் அதையும் செய்துகொள்வார்களே. தாய்நாட்டு ஆசாரம், உடை, தெய்வசிந்தனை, மதப்பற்று யாவற்றையும் மத்திய தரைக்கடலில் கைகழுவிவிட்டு வருகிறார்கள்.

இத்தகைய ஒருவர் தாம் இங்கிலாந்திற்குச் சென்று கல்விகற்று வந்ததால் தமது வாழ்க்கை முறைமை அதிக செலவுள்ளதாக மாறிவிட்டதென்றும், ஆகையால் அதிக சம்பளம் கிடைக்கும் உத்தியோகமே வேண்டுமென்றும் முயற்சிசெய்வதைக் கண்டோம். இவர் மீசையைக்கூட காலேயரைக் கால் மீசையாக்கிக்கொண்டார். தமது முன்னோர் ஆசாரம் நடையுடை பாவனைகளை யலட்சியம் செய்து தகாத அன்னிய ஆசாரங்களைக் கைப்பற்றி அதைப் பெரிய கௌரவமாகக் கருதும் இவர்கள் "நமது செய்கை பெற்ற தாய்க்குத் துரோகம் செய்வதாகிறது. நம்மால் நம்மக்களும் கெடுமாதலால் நாம் தாய்நாட்டிற்கே தீங்கு விளைவிக்கிறோம்" என்பதைச் சற்றும் நினைக்கிறார்களில்லை. தற்சமயம் இவர்கள் வரும்போது அன்னியமதத்தில் சேர்ந்துவிடாமலும், ஒரு வெள்ளை மாதோடு வராமலும் தனியே பெற்றோர்க்குப் பிள்ளையாக வந்து சேர்ந்தால் அதுவே பெரும்புண்ணியம் என்று கருதவேண்டியிருக்கிறது. மற்ற விஷயங்களிலெல்லாம் நமது மத ஆசார ஒழுக்கங்களைக் கைவிடாமல் இருந்தால் மாறு உடை யணிந்துகொள்வதால்மட்டும் கெடுதி விளையாது. அதைக்கூட வேறெந்த நாட்டாரும் செய்வதில்லை. இவர்கள் யாவற்றிலும் அடியோடு மாறிவிடுகிறார்கள். எல்லாம்வல்ல பரம்பொருளே இத்தகைய ஆபத்துகளிலிருந்தும் நம்தாய்நாட்டைக் காப்பாற்ற வேண்டும்.

பத்திரிகாசிரியர்.

---

## ஓர் கடிதம்.

இன்று நாம் டிராம் வண்டியில் வரும்போது ஒரு வாலிப மங்கையும் குழந்தையை யேந்திவரும் ஒரு வாலிபரும் வந்து வண்டியிலேறுவதைக்

கண்டோம். அம்மங்கையைப் பார்க்கும்போதே ஸ்மார்த்தப் பிராம்மண மாது என்று நன்கு விளங்குகிறது. குழந்தையை யெடுத்துக்கொண்டு கூட வந்த வாலிபரை நோக்கின் தாழ்ந்த ஜாதியைச் சேர்ந்தவரே யென்று கூற லாமெனினும், குறைந்தது அவர் பிராம்மணரல்லவென்றே உறுதியாகக் கூறலாம். பிறகு விசாரித்தபோது அவ்வாலிபர் அப்பிராம்மண மாதின் சகோதரரே யென்று தெரியவந்தது.

சகோதர சகோதரிகளே! நம் புண்ணியபூமியில் நமது முன்னோருடைய ஆசார ஒழுக்கங்கள் இத்தகைய சீர்கேடடைவதைக் காண எந்த உண்மை ஹிந்துவின் மனந்தான் பதைக்காது. முதல்வருணத்தவரே தம் மக்களின் ஜாதிமதாசாரங்கள் இவ்வாறு கெட்டழியும்படி விட்டுவிட்டால் மற்றவர் கள் விஷயம் கேட்கவும் வேண்டுமோ. வர்ணாசிரம தர்மம் குன்றின், அத னால் நம் தாய்நாட்டிற்கு நேரிடக்கூடிய பயங்கரமான தீமைகள் இத்தன் மையவென ஆன்றோர் அடிக்கடி பத்திரிகைகளின் மூலமாக வற்புறுத்திக் கூறிக்கொண்டிருந்தும் அதைப்பற்றி யேனோ இவர்கள் எள்ளளவும் சட்டை செய்வதில்லை? இதுதான் கலிகாலக் கொடுமையோ? இப்பெற்றோரின் நடக்கை தீபத்தைப் பிடித்துக்கொண்டே கிணற்றில் விழுவதுபோ லிருக்கிறதேயன்றி வேறில்லை. பெற்றோர்களே! இனியேனும், உங்கள் சொந்த மக்கள்மேல் உங்களுக்கு இரக்கமுண்டாகாதா? உங்கள் சந்ததி யார் முன்னேற்றமடையவேண்டுமென்றும், நம் முன்னோர்கள்போல் அவர் கள் தெய்வீகத்தன்மை பொருந்தி உலகிற்கு ஆரியர்களாய் விளங்கவேண்டு மென்றும், நம் தாய்நாடு பூர்வீக உன்னத நிலையையடைந்து என்றும் ஞான பூமியாய்ப் பிரகாசிக்கவேண்டுமென்றும் நீங்கள் எண்ணங்கொண்டால் உங் கள் மக்களின் ஆசார ஒழுக்கங்கெடாதபடி முன்னே கவனியுங்கள். கல் வியைவிட ஒழுக்கமே சிறந்ததென்பதை மறவாதீர்கள். இன்றேல் நீங்கள் ஆண்டவனுக்குப் பதில்சொல்ல நேரிடும். கருணைக்கடலாகிய பசுபதி அருள்புரிவாராக.

ஓர் ஹிந்து.

---

## ஆரிய சித்தாந்தம்.

### (கர்மவிபாகம்.)

(186-ம் பக்கத் தொடர்ச்சி.)

இனி வைத்திய நூல்கள் பாலொடு பாலும், நீரொடு நீரும் ஒன்றுபடு வதுபோலப் பரப்பிரம்மப் பொருளொடு வேறறக் கலப்பதே சாயுஜ்ய முத் தியென்று கூறும். அவ்வாறு கூறுவதனால் பாசத்தினின்றும் விடுபட்டுள்ள ஜீவான்மா பரமான்மாவேயாகுமென்பது புலப்படும். இதுபற்றியே சிவ ஜீவர்களுக்குப் பேதங்கூறி விளக்கவெழுந்த உபநிஷத் “பாசபத்தஸ்ததா ஜீவஃ பாசமுக்தஸ்ததாசிவஃ” பாசத்தினாற் பந்திக்கப்பட்டுள்ள பொருளுக்கு ஜீவன் என்று பேர். இயற்கையிலேயே பாசத்தினின்றும் நீங்கியிருக்கும்

பொருளுக்குச் சிவன் என்று பேர் என்றது. இதனால் பசு என்ற பெயரும் ஜீவனுக்குப் பந்தத்தினால் உண்டான பெயரேயாகும் என்பது விளங்கும். பிரமத்துக்குரிய எண்குணங்களில் "இயல்பாகவே பாசமற்றிருப்பது" என்பது ஒன்று. இதனால் பாசமில்லாதிருப்பதே சிவமும் பாசம் பற்றியிருப்பதே ஜீவன் என்பதும் விளங்கிற்று. இனிக் கர்மத்தினாலும், தவத்தினாலும், யோகத்தினாலும், ஞானத்தினாலும் பாசபந்தங்களைத் தகித்தெழுந்து நிர்மலமாய் விளங்கும் ஆன்மாவும் பரசிவப் பொருளே யாகுமென்பது வைதிக நூற்றுணிபு. ஏனெனில் "பாசமுக்தஸ்ததாசிவஃ" என்று உபதேசித்ததனாலென்க. பாசநாசத்தினால் நிர்மலமான சீவன் சிவத்தொடு கலந்து சர்வ வியாபகனாய்விடுவன் என்பது புலப்படும். அணுரூபியான ஜீவன் சர்வவியாபி யாவதெப்படியெனில் ஒரு குடம் நீரில் ஒரு பிடி உப்பையிட்டால் அவ்வுப்புச் சிறியவளவினதாக இருந்தாலும் அக்குடநீர் முழுவதிலும் கலந்துநிற்பதுபோலாம் என்பது. அக்குடத்திலிட்ட உப்புத் தன்னளவை ஒழித்து நீரினளவாகவே நிற்பதுபோலச் சீவனும் பரபிரமத்தினளவாகவே வியாபித்துத் தன்னளவொழிந்தேநிற்கும். அதாவது ஒரு படி நீரில் அரைப் படி உப்பைக் கலந்தால் அவ்விரண்டுஞ் சேர்ந்து ஒன்றரைப்படி நீராகாமல் ஒருபடி நீராகவே நிற்பதுபோலவென்று வைதிக நூல்கள் கூறும். இவ்வாறு பிரமத்தொடு வேறறக்கலந்த ஜீவாத்மா மீண்டும் பிறப்பதில்லை அதற்கு இரவு பகலென்கிற காலவரையறையில்லை. விருத்தியாய் நிறைவதும் க்ஷீணித்துக் குறைவதுமின்றி என்றும் ஒரு தன்மையாகவே யிருக்கும். அதற்குத் துன்பமென்பதே கிடையாது. எப்போதும் ஆனந்தமேயாம். அது சச்சிதானந்த சொரூபமாகவே விளங்குமென்றும் வைதிக நூல்களெல்லாம் கூறும். இதுவே முத்தியென்பதாம். இவ்விஷயத்தில் வேதாகமங்கள் சிறிது மாறுபடவுரைப்பினும், துன்பமற்ற நிலைமையே முத்தியென்பதில் மாறுபடாமையால் வீடு, மோட்சம், முக்தி என்பன ஜனனமரண சம்சார பந்தத்தினாலாய துன்பங்களினின்றும் விடுபடுதலென்கிற ஒரே பொருளில் அமைந்துள்ளனவாதலால் நாம் ஐயப்பட வேண்டுவதில்லை. சகல துன்பங்களில் நின்றும் விடுபடுதலே முத்தி, மோட்சம், வீடு யென்பனவற்றின் பொருளெனக் கொள்க.

இந்த நிலைமையை அடைவதற்கே "நித்தியவிதி" என்று தொடங்கியதுமுதல் ஞானயோகம் என்ப திறுதியாக நியமங்களை ஆரிய சித்தாந்தங்களினின்றும் திரட்டியெடுத்து எழுதினோம். யாமாக ஒன்றும் கூறியதில்லை. இனி முற்கூறிப் போந்தவற்றிற் சில முக்கியாம்சங்களைச் சிறிது கூறி முடித்து வேறு விஷயங்களைக் கவனிப்போம்.

மனம் வாக்கு காயம் மூன்றும் சுத்தியாயிருந்தாலன்றிப் பந்தத்தைத் தகிக்கும் ஞானமுதியாது. அதுபற்றி முக்கரணங்களையும் சுத்திசெய்ய வேண்டும். இதை விளக்கவே கன்மகாண்டமாகிய ஸ்மிருதிகள் எழுந்தன. அந்த ஸ்மிருதியின் வன்மைகொண்டே கன்மங் கூறப்பட்டது. அவற்றுள்

சரீரசுத்திக்கு நித்தியந்தவறுமல் ஸ்நானம் செய்வதே விதிக்கப்பட்டது. பாலர் விருத்தர் நோயாளிகள் வெந்நீரிலும் ஸ்நானம் பண்ணலாம். ஏனையவர்கள் குளிர்ந்த நீரில் ஸ்நானம் செய்வதே சுத்தியாம். அவருள்ளும் ஸ்திரீகள் பிரமசாரிகள் சந்நியாசிகள் இவர்கள் வெய்யிற் புறப்பட்டபின்னரே ஸ்நானம் செய்யவேண்டும். மற்றைய கிருகஸ்தர்கள் சூரியோதயமாவதற்கு முன் ஸ்நானம் செய்யவேண்டும். இவற்றுக்குரிய காரணங்கள் முன்னரே கூறப்பட்டன.

இதன்பின் சுத்தமான வஸ்திரந் தரித்தல்வேண்டும். நூலாலாய வஸ்திரம், நாரினுல் நெய்த வஸ்திரம், பட்டினுற் செய்த வஸ்திர மிவற்றில் சுத்தமான ஏதேனுமொன்றைத் தரித்தல் வேண்டும். ஈர வஸ்திரத்தை உடுத்தியிருப்பதும், அழுக்குப்படிந்த பழைய வஸ்திரமுடுப்பதுங் கூடாது. பிறகு தங்கள் குலாசார மதாசாரங்களுக்குத் தக்கபடி நெற்றியில் உரித்தான மதக்குறியைத் தரித்தல்வேண்டும். அதன்பின் பிராமணர்கள் சந்தியாவந்தனம் செய்து காயத்திரிமகாமந்திரத்தை இயன்றமட்டில் ஜபித்தல்வேண்டும். ஏனையவர்கள் தங்கள் தங்கள் குலாசாரப்படி சற்குருவினுல் உபதேசிக்கப்பட்ட மந்திரத்தை ஜபித்தல்வேண்டும். பூர்வான்னத்தில் இந்தக் கன்மங்களை முடித்துக்கொண்டு, பரான்னகாலத்தில் ஜீவனுர்த்தத்துக்கு .வேண்டிய பொருள் சேகரிப்பதில் முயலவேண்டும்.

மத்தியான்னகாலத்தில் பொருண்முயற்சியில் பிரவேசித்திருந்தவர்கள் வீட்டைவிட்டு வெளியிற் சென்றிருந்தால் மறுபடியும் ஸ்நானம் செய்து மத்தியான்ன கடமைகளை முடித்துப் பிறகு தமது குலாசார தர்மப்படி தேவபூஜை செய்யவேண்டும். பூஜைசெய்து தேவனுக்கு நைவேத்தியம் செய்த உணவை அதிதிகளுடன் புசிக்கவேண்டும். இவற்றுக்குரிய கிரமங்கள் முன்னரே விரிவாகக் கூறப்பட்டன. காகம் நாய் முதலிய ஜந்துக்களுக்கும் சிறிதுணவளித்தல்வேண்டும். போஜனம் செய்தபின் கிருகஸ்தர்கள் தாம்பூலந்தரித்தல்வேண்டும்.

அபரான்னகாலத்தில் தன் பந்துவர்க்கங்களுடன் சிறிதுநேரம் இதிகாசபுராணங்களைக் கேட்டுக்கொண்டு நித்திரை செய்யாமலிருக்கவேண்டும். உண்டகளையாறினபின் இலௌகிகத் தொழிலில் பிரவேசிக்கலாம். சாயான்னகாலம்வரையில் இலௌகிக காரியம் செய்தபின் அந்திக்கு முன்னுகவே கிருகத்திற்கு வந்துவிடவேண்டும். ஆறு குளங்களிலாயினும் கிருகத்திலாயினும் சந்தியாவந்தனுதிகளை முடித்துவிட்டுத் தேவாராதனை செய்துவிட்டுப் புசித்தல்வேண்டும். ஒரு ஜாமத்துக்குள்ளாகவே உண்ணவேண்டும். அதன்பின் இதிகாச புராணங்களைக் கேட்டுக்கொண்டிருந்து இரண்டாவது ஜாமத்தில் நித்திரைசெய்யவேண்டும். படுத்துக்கொண்டு தான் வழிபடுங் கடவுளைச் சிந்தித்துக்கொண்டே தன்னை மறக்கவேண்டும். பகற்காலத்தைச் சரியாய் ஐந்தாகப் பங்கிட்டால் ஒரு பங்குக்கு ஆறு நாழிகையாகும். ஒவ்வொரு பங்கும் ஒவ்வொரு அன்னமென்னப்படும்.

அன்னமென்பது பகல். இதில் சூரிய உதயகாலமுதல் ஆறு நாழிகை பரியந்தம் பூர்வான்னமாம்; மேல் பன்னிரண்டு நாழிகைவரை பரான்னமாம்; அதற்குமேல் பதினெட்டுநாழிகைவரையில் மத்தியான்னகாலமாம்; மேல் இருபத்துநாலு நாழிகைமட்டும் அபரான்னகாலம் என்னப்படும்; அதன் பின் முப்பது நாழிகைவரைக்கும் சாயான்னமாம். இவையே ஐவகை அன்னங்கள் என்று பகலின் பகுப்பு ஜோதிட நூல்களிற் கூறப்படும். ஆரியர்கள் தங்களுடைய தொழிலுக்குத் தக்கவாறு பகலை யிவ்வாறு பகுந்துக் கொண்டார்கள். இரவில் முன்னிரா பின்னிரா நடுரா என மூன்றே பகுப்பாம். அஸ்தமித்து ஒரு ஜாமம் வரையில் முன்னிராவாம்; இரண்டு மூன்றும் ஜாமங்கள் நடு இராவாம். இதற்குமேல் பின் இரா. அதுவுங் கன்மத்துக்கேற்றவாறே வகுத்துக்கொள்ளப்பட்டது. இப்பிரிவுகளில் செய்யப்படும் கன்மங்கள் முன்னர்க் கூறப்பட்டன.

இதுகாறுங் கூறிப்போந்த கன்மங்கள் அந்தக்கரண புறக்கரணங்களைச் சுத்திசெய்யும். மந்திரஜபம் தெய்வதியானம் இவ்விரண்டும் மனதைப் பரிபாகப்படுத்தும் வன்மையுள்ளன. இவ்விரண்டும் நீங்கிய கன்மங்கள் பயன்தருவது அரிதேயாம். மனச்சுத்திக்கு இவ்விரண்டுமெட்டிற் போதுவதன்று. சத்தியம், பொறுமை, ஜீவகாருண்யம், கள்ளாமை, புலாலுண்ணுமை, பொய்கூருமை, பிறன்மனை விழையாமை, பிறர் பொருளையிச்சியாமை, பிறர்க்குத் துன்பம் செய்யாமை, ஞான நூல்களை யோதல், அகுயையின்மை முதலியவாகக் கூறப்பட்டவைகளைத் தவருமல் அனுஷ்டித்தல் வேண்டும். இவைகளே மானசிக ஸ்நானம் என்னப்படும். சரீரசுத்தி மனிதகுணம் என்றும் முற்குறித்தவைகள் தெய்வகுண மென்றும் கூறப்படும். இவ்விரண்டு சுத்திகளையும் அனுஷ்டியாதவர்களுக்கு எவ்வித கன்மங்களும் பயன்தரா. தீர்த்தயாத்திரை க்ஷேத்திரயாத்திரைகளும் பயன்றருவதில்லை. இந்த இருவகைச் சுத்திகளாலும் அகக்கருவி, புறக்கருவிகளைச் சுத்திசெய்துகொண்டு யோகநெறியில் நின்று மெய்ஞ்ஞானத்தைப் பெறவேண்டும். அது பெற்ருல் முற்கூறிவந்த முத்தி யெளிதில் கைகூடும். இதுகாறும் நித்தியவிதிகளில் கூறிய நெறிகளை நினைவுக்குக் கொண்டு சுருக்கியெடுத்துக் கூறப்பட்டது. இவைகளைக் கசடறவுணர்ந்தவர்களுக்குத் தான் அப்பிரத்தியட்சமாய் உள்ளது இல்லதென்று வழக்கிடப்பட்ட தெய்வவுண்மை புலப்படும். அல்லாதார் எத்தனைகாலம் வழக்கிட்டாலும் காண்பதரிது. இனி இதற்குச் சம்பந்தமாயுள்ள வேறு விஷயங்கள் வரையப்படும். (தொடரும்.)

**சிவானந்தசாகர யோகீஸ்வரர்.**

---

## நாலடியார் வசனம்

(175 ம் பக்கத் தொடர்ச்சி.)

### 11 - ம் அதிகாரம்.

#### பழவினை.

(முற்பிறப்பில் செய்த நல்வினை தீவினைகள்.)

*(ஓர் பசுவின்) இளங்கன்றானது பல பசுக்களின் மத்தியில் (தாய் தன்னை) விட்டுவிட்டாலும், (தனது) தாயைத் தேடிச்சென்று அடைவதில் வல்லமை யுண்டாகும். (அதுபோல) முற்பிறப்பிற் செய்த கர்மமும் தன்னைச் செய்தவனைத் தேடி அடைவதில் அக்கன்றைப்போலவே வல்லமையுடையதாம்.* (1)

*அழகும், இளமையும், மிகுந்த செல்வமும், மதிப்பும் (ஆகிய இவைகளெல்லாம்) ஓரிடத்தும் நிலையாக இராமல் அழிந்துபோவதைப் (பிரத்தியக்ஷமாகப்) பார்த்திருந்தும், ஏதேனும் ஒரு வழியில், சிறிது நல்வினையாயினும், செய்யாதவனுடைய வாழ்க்கையானது, இவ்வுடலைச் சிலகாலம் பெற்றிருந்து அழியுந் தன்மையுடையது. (தோன்றியது ; அழிந்தது ; என்பது மாத்திரமேயன்றி, வேறு சிறிதும் பயன் இல்லாதது என்றபடி).* (2)

*(செல்வம் முதலியவைகளால்) மேன்மையடைய வேண்டுமென்று விரும்பாதவர்கள் யாரிருக்கின்றார்கள்? ஒருவருமில்லை (ஆனாலும்)(அவரவர்) இன்பங்கள் (அவரவருடைய) ஊழ்வினைக்குத் தக்கபடி (முன்னமே) அளவு செய்யப்பட்டுள்ளன. (அதற்குத் தக்கபடிதான் இன்பதுன்பங்களுண்டாம்.) விளாங்காயைத் திரண்ட வடிவாகச் செய்தவர்களுமில்லை ; களம்பழத்தைக் கறுப்பாகச் செய்தவர்களுமில்லை. (அவைகள் இயற்கையாகவே அவ்வாறிருத்தல்போல, இன்பமும் அவரவர்கள் செய்த புண்ணியங்களுக்குத் தக்கபடி உண்டாகும். என்றபடி.)* (3)

*மழையானது பெய்யாவிட்டாலும் (அதைப்) பெய்யும்படி செய்பவர்களுமில்லை. அதிகமாகப் பெய்தால் (அதனைத்) தடுப்பவர்களுமில்லை. (இவைபோல) (பூர்வ வினையால்) வரக்கூடிய துன்பங்கள், வல்லமை மிக்க முனிவர்களாலும் தடுக்க முடியாதனவாம். வரக்கூடிய இன்பங்களும் அப்படியே நீக்க அறியனவாம்.* (4)

*பனையினளவாக (மிக்க உயர்ந்த நிலையில்) இருந்தவர்கள், தினையளவாகித் (தாழ்ந்தவர்களாய்) தமது சாமர்த்தியங்களை யெல்லாம் உள்ளே அடக்கிக்கொண்டு, தினந்தோறும் தங்கள் பெருமைகெட்டு வாழ்வார்கள். இதன் காரணத்தை யோசித்தால், முற்பிறப்பில் செய்த வினையேயல்லாமல் வேறு என்ன இருக்கிறது ? (வேறு காரணமில்லை.)* (5)

*பலவகைப்பட்ட சிறந்தநூல் கேள்விகளால், உயிர்வாழ்க்கையின் பயனை அறியவல்லவர்கள், விரைவில் இறக்கவும், அத்தகைய கல்வியைச்*

சிறிதும் கல்லாத மூடர்கள், பலநாள் உயிர்வாழ்ந்திருத்தலை (இதற்குக் காரணம் யாதென்று) ஆராய்ந்தறிவீராயின், கல்லாத மூடர்கள், அறிவு என்னும் சாரத்தைத் தம்மிடத்தில் பெற்றிராமையால், யமன் (அம்மூடரைத்) திப்பி என்றெண்ணி, கொல்லமாட்டான். (6)

அன்னப்பறவைகள், அடம்பம்பூக்களைத் தங்கள் அலகுகளால் கோதிக் கிழிக்கும்படியான அலைகள் நெருங்கிய கடலின் குளிர்ச்சி பொருந்திய துறையையுடைய பாண்டியனே! (சிலர்) துன்பம்பொருந்திய மனத்தையுடையவர்களாய் எல்லாரும் பார்க்கும்படி (பல வீடுகளின்) பெரிய வாயில்களிலே (சென்று) நின்று (பிச்சையின்பொருட்டு) உழலும் செயல்களெல்லாம் முற்பிறப்பில் செய்த தீவினைகளின் பயனேயாகும். (7)

காற்று வீசுதலினால், நெய்தல் மலர்கள் தேனைச் சிந்துகின்ற, பெரிய கடலின் குளிர்ச்சிபொருந்திய கரையையுடைய பாண்டியனே! சிலர், அறியாதவர்களு மல்லர்; அறியவேண்டியவற்றை அறிந்தும் நிந்தையோடு கூடிய காரியங்களைச் செய்தல், (முற்பிறப்பில்) செய்த தீவினையால் வரும்.

நெருங்கிய கடலால் சூழப்பட்ட இவ்வுலகத்தில், எல்லாரும் எவ்வளவாயினும், துன்பத்தை (யடைய) விரும்பமாட்டார்கள். (அவர்கள் யாவரும்) விரும்பும் பயன் நல்ல இன்பங்களேயாகும். (ஆனாலும்) (ஒருவர்) விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், ஊழ்வினையால் வரத்தக்க இன்பதுன்பங்கள், அவ்வவரை அடையாமல் விடுதல் இல்லை. (9)

முற்காலத்தில் செய்யப்பட்ட வினைகளும் (அனுபவிக்கவேண்டிய காலத்தில்) குறையமாட்டா; அதிகப்படமாட்டா; முறைதவறிவரமாட்டா. துன்பம் வந்தகாலத்தில் உதவி செய்யமாட்டா. ஆகையால் துன்பம் வந்த காலத்தில் வருந்துவது ஏன்? (அனுபவித்தே தீரவேண்டும், ஆதலால் துக்கிப்பதாற் பலனில்லை. என்றபடி.) (10)

## 12 - ம் அதிகாரம்.

## மெய்ம்மை.

### (அவ்வப் பொருள்களின் உண்மைத்தன்மை.)

வரிசையாகிய வளையல்களை யணிந்தவளே! (தம்மால்) கொடுக்கமுடியாத ஒருபொருளை (தம்மிடம் வந்து கேட்பவர்களுக்கு) இல்லை என்று சொல்வது யார்க்கும் குற்றமாகாது. அது உலகத்திலுள்ளவர்களின் இயற்கையே. (ஆனால்) கொடுப்பதாகச் சொல்லி, (பின்) வெகுநாட்கள் கழித்து, (அவர்கள்) ஆசை கெடும்படி (இல்லையென்று) தாம் சொன்ன சொல்லைப் பொய்யாக்குதல், (அதாவது, நம்பிக்கை மோசம் செய்தல்), (தமக்கு ஒருவர்) செய்த நன்றியைக் கொன்றவர்களுடைய குற்றத்தைவிட மிகுந்த குற்றமுடையதாம். (1)

தகுதியுடைய பெரியோரும், தகுதியில்லாச் சிறியோரும் எக்காலத்தும் (யாவரிடத்தும்) தமது இயற்கையான குணத்தினின்றும் மாறுபடார்.

(எதுபோலவெனின்), வெல்லம் யார் தின்றாலும் கசக்காது. வேப்பங்காய் தேவர்கள் தின்றாலும் (இனிக்காது) கசக்கும். (2)

குளிர்ச்சிபொருந்திய மலைநாட்டையுடைய பாண்டியனே! (ஒருவர்க்குச்) சாய்கால் (சம்பத்து) உள்ளகாலத்தில் (அவர்க்கு) மிகுந்த பந்துக்கள் ஆகாயத்தில் சஞ்சரிக்கும் நக்ஷத்திரங்களைவிட அதிகமாயிருப்பார்கள். ஒருவர் துன்பமடையுங் காலத்தில் (அவர்க்கு நாங்கள்) பந்துக்கள் என்று சொல்கின்றவர்கள் (மிகச்) சிலரே யிருப்பார்கள். (3)

குற்றமில்லாத இவ்வுலகத்திற் பொருந்திய (அறம் பொருள் இன்பம் என்னும்) மூன்றில், இடையிற் கூறப்படுவதாகிய பொருளை (ஒருவன்) பெற்றிருந்தால், (அவன்) மற்ற இருபுறங்களிலுள்ள அறத்தையும் இன்பத்தையும் அடைவான். அந்த இடையிற் கூறப்பட்ட அப்பொருளையடையாதவன் உலைக்களத்திலேபோட்டு காய்ச்சுவதாலுண்டாகும் துன்பத்தைப் போன்ற துன்பத்தை யடைவான். (4)

நல்ல பசுவின் கன்றானால், இளங்கன்று யிருந்தாலும் (அதிக விலை பெறும். (அதுபோல) கல்வியில்லாதவர்களானாலும், செல்வமுள்ளவர்களாயிருந்தால், அவர்கள் வாயிலிருந்து வருஞ் சொற்கள் (யாவராலும்) அங்கீகரிக்கப்படும். (படித்த புலவர்களாயினும்) தரித்திரர்களாயிருந்தால், அப்படிப்பட்டவர்களுடைய வாயிலிருந்து வருஞ் சொற்கள், சொற்ப ஈரமிருக்குங்காலத்தில் (பூமியை) உழுதால் எப்படியோ அதுபோல, மேலே மாத்திரம் காணப்பட்டு எவராலும் அங்கீகரிக்கப்படாவாம். (5)

விசாலமான கண்களையுடைய பெண்ணே! உப்பு, நெய், பால், தயிர், பெருங்காயம் (முதலியவற்றைச் சேர்க்கவேண்டிய பக்குவப்படி) சேர்த்து சமைத்தாலும், பேய்ச்சுரைக்காய் தன் இயற்கையான கசக்கும் குணத்தை விடமாட்டாது. (அதுபோல) இயற்கையில் அடக்கமில்லாதவர்கள் தத்துவ ஞானத்தை யுணர்த்தும் நூல்களை மிகுதியாக எப்பொழுதும் படித்துவந்தாலும் அடங்கமாட்டார்கள். (6)

புன்னை மரங்களின் பெருமை பொருந்திய மலர்கள் வாசனை வீசிக்கொண்டிருக்கும்படியான சோலைபொருந்திய மிக்க நீரையுடைய கடற்கரையையுடைய பாண்டியனே! தம்மைப் பிறர் (காரணமில்லாமலே) இழிவாகப் பேசினால், தாமும் அவர்க்கு எதிரிலேயே நிந்திக்கக்கடவர். அப்படிப்பட்டவர்களிடத்தில் தாக்ஷிணியமென்ன? வரவேண்டிய நன்மை தீமைகள் (தடையின்றி) எல்லார்க்கும் வரும். (7)

பசுக்கள் வெவ்வேறு நிறமுடையனவாயிருந்தாலும் அப்பசுக்களால் கொடுக்கப்படும் பால் வெவ்வேறு நிறமுடையனவல்ல. (ஒரேவிதமாக வெண்மையாகவே யிருக்கும்) அப்பசுக்களைப்போல தரும மார்க்கங்களை இவ்வுலகத்தில் வெவ்வேறு உருவினவாகக்கொள்க. அந்தப் பால்போல தருமமானது ஒரே தன்மையுடையதாகும். (தருமம் செய்யும் வழிகள் பல வாயிருந்தாலும் தருமம் என்பது ஒன்றேயாம். என்றபடி.) (8)

ஆராய்ந்து பார்க்குமிடத்து இவ்வுலகத்தில் ஒரு பழிப்பான சொல்லையும் அடையாதவர் எவர்? (ஏதாவது) ஒரு உபாயத்தால் வாழாதவர்கள் எவர்? (தம் வாழ்நாளின்) இடையிலே துன்பத்தை யடையாதவர்கள் எவர்? (தம் வாழ்நாளின்) முடிவுவரையில் செல்வத்தை அனுபவித்தவர் எவர்? (ஒருவருமில்லை என்றபடி.) (9)

ஆராயுமிடத்து இறந்தபின் தம் உயிரோடு வருவது, தாம்தாம் செய்த நல்வினை தீவினைகளேயல்லாமல், வேறொன்றும் எங்கும் இல்லை. தாம் (பலவகை உண்டி முதலியவற்றால்) போஷித்து, (அணி முதலியவற்றால்) அலங்காரம் செய்த உடம்பும் யமன் உயிரைக் கொண்டுபோகும் காலத்தில் பிரயோசனம் இல்லாததாய்விடும். (தொடரும்.) (10)

**பூ. ஸ்ரீநிவாசன்**, தமிழ்ப்பண்டிதர்,
சித்தூர்.

---

## தற்காலப் பெண்கல்வி.

மகிதலத்தில் மானிடதேகம்பெற்ற ஒவ்வொருவருக்கும் 'கல்வி' முக்கியமென்பது யாவரும் அறிந்த உண்மை. "கல்வியில்லாதவன் கண்ணில்லாதவ" னென்றும் "விலங்கொடு மக்களனையர் இலங்குநூல் கற்றாரோடேனையவர்" என்றுங் கல்லாதவர்களை இழித்துக் கூறியுள்ளார்கள். கல்வி அவசியமென்று கற்கப்புகின் அதில் பல இடையூறுகளும் கஷ்டங்களுமிருக்கின்றன.

இனி, பெண்கல்வியை நோக்குங்காலத்து பெண்களுக்குக் கல்வி அவசியமென முறையிடுகின்றனர் பலர். பெண்கள் கற்றல் கூடாதெனவும் சிலர் மொழிகின்றனர். பெண்கள் கற்கவேண்டியது அவசியம் என்பதே அறிவுடையா ரபிப்பிராயம். ஆனால் தற்காலப் பெண்கல்வியின் நிலையை நோக்குமிடத்து மடவார் கல்விகற்றல் கெடுதலே என்றுதான் தோன்றும். இதைச் சிறிது விளக்குவாம்.

நமது தமிழ்நாட்டில் வதியும் யாவரும் தங்கள் பெண்கள் கல்வி கற்றல் வேண்டுமென்னும் பேரவாக்கடலில் அழுந்திக்கிடக்கின்றனர். இவ்வெண்ணங்கொள்வது நம் தேசத்தின் நலத்திற்கே என்பதை மறுக்க யாரும் முன்வரார். அவ்வாறு பெண்களைப் படிக்கச்செய்யவேண்டுமென்றவாக்கொள்ளும் பெற்றோர்கள் அப்பெண்களுக்குத் தாங்களே கல்வி போதிப்பதில்லை. பெண்பிள்ளை பாடசாலைகளுக்கே அனுப்புகின்றார்கள். இத்தென்னிந்தியாவிலுள்ள பெண்பாடசாலைகளில் நூற்றுக்கு தொண்ணூற்றெட்டு பாடசாலைகள் கிரிஸ்தவப் பெண்பாடசாலைகளாகவே இருக்கின்றன. அவைகள் கிரிஸ்தவமதப் பிரசாரக சங்கத்தாரால் ஸ்தாபனம் செய்யப்பட்டவை. "இந்துக்களைக் கிறிஸ்தவர்களாக்கவேண்டும்" என்ற எண்ணத்தையுடைய நமது கிரிஸ்தவ சகோதரர்கள் தங்களில் படித்த ஆடவர்களையும், பெண்களையுமே தங்கள் பாடசாலைகளில் உபாத்தியாயர்களாயும், உபாத்தியாயினிகளாயும் அமர்த்துகின்றார்கள். இப்பள்ளிக்

கூடங்களை ஸ்தாபிப்பதின் காரணத்தை நமதிந்தியப் பெற்றோர்களறியாது அவர்கள் பாடசாலைகளுக்குத் தங்கள் பெண்களை அனுப்புகின்றார்கள். நமக்குப் பல்லாயிரமைல் தூரத்திலிருக்கும் அமரிக்கநாட்டுப் பாதிரிமார்களுக்கு இதே எண்ணமிருப்பின் இந்தியாவிலேயே வதியும் நமது கிறிஸ்தவ நண்பர்களுக்கு இவ்வெண்ணமில்லை யென்பதை மறுக்கமுடியுமோ?

புரோகிதர்களைப்போல, பெண் குழந்தை பிறந்த மூன்றாவதாண்டில் "வாழைப்பழத்தில் ஊசியை ஏற்றுவது" போன்று, அக்குழந்தையின் அன்னையிடஞ் சென்று, இன்பமாக வார்த்தையாடி, ஏழையாயிருந்தால் சம்பளமில்லாமல் கல்வி போதிப்பதாகவும் வாக்களித்துப் பிறகு ஓர் சம்பளக்காரியை வைத்து, பெண்பிள்ளைகளை வீடுதோறுஞ் சென்று, பாடசாலைக்கு அழைத்துவரும்படியாயும், அக்குழந்தைகள் நடக்கத் தயங்கினால் அவைகளைத் தூக்கிக்கொண்டும் இடையிலெடுத்துக்கொண்டும், பாடசாலையில், தங்கள் தாயையோ அல்லது தந்தையையோ நினைந்து அழுதால், ரொட்டி, மிட்டாய் முதலான தின்பண்டங்களைக் கொடுத்தும், பின்பு சாப்பாட்டு நேரத்தில் அவர்கள் இல்லத்தில் கொண்டுபோய்விட்டும், அன்னமுண்ட பிறகு திரும்ப அழைத்துக்கொண்டும் வருகின்றனர். இவர்களுக்கு என் இவ்வளவு கர்ம சிரத்தை என்பதை ஆராய்ந்து இவர்கள் எண்ணத்தைக் கூறுதும்.

குழந்தைகளுக்கு ஐந்து அல்லது ஆறு வயதானவுடன் நாம் பள்ளியில் கொண்டுபோய் விடுகின்றோம். சிறு குழந்தைகளுக்கு நெருப்பைத் தொட்டால் சுடும், பாம்பை அருகினால் தீண்டும் என்ற தன்னறிவு தனக்கே வருமுன்னர் மதத்தைப்பற்றி அவர்களுக்கு எவ்வாறு தெரியும்? நம் கிறிஸ்தவ நண்பர்கள் இக் குழந்தைகளுக்கு இளம் பிராயத்திலிருந்தே "ஏசு"வைப் பற்றிய பலவிதமான விஷயங்களைப் போதித்து சிறு வயதில் நமது இந்து மதத்தின் கொள்கையையும், பற்றையும், சிறப்பையும் அறியாமுன்னர், பைபிலையே போதிக்கின்றனர். குழந்தைகள் அகமேகின உடன் "அம்மா விளக்குவை வாசிக்கவேண்டும்" என்று சொல்லுகின்றனர். தாய் இந்த மட்டில் குழந்தைக்குப் படிக்கவேண்டுமென்ற புத்திவந்ததே என்றகமகிழ்ந்து, பரவசமடைந்தவளாய், இனி கிறிஸ்தவப் பாடசாலைக்கே குழந்தைகளை அனுப்பவேண்டுமென்ற எண்ணத்தைத் திண்ணமாக உடையவளாகின்றாள். "மத்தேயு", "மாற்கு", "யோவான்" என்ற பல கிறிஸ்தவப் புஸ்தகங்களை இக்கிறிஸ்தவ உபாத்தியாயினிகள் இதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் சங்கத்தினின்று இலவசமாகப்பெற்று குழந்தைகளுக்குக் கொடுக்கின்றார்கள். புஸ்தகத்தின் அழகையும், அதில் தீட்டப்பெற்றிருக்கும் படங்களின் நேர்த்தியையும் கண்ணுறும் குழந்தைகள் அப்புத்தகங்களை ஆவலோடு வாங்கிக்கொண்டுவந்து படித்து வியாக்யானம் செய்கின்றனர். மோசத்தையறியாத தாயும் இதைக் கேட்கின்றாள். காலம் செல்லச் செல்ல குழந்தைகள் ஆனந்தக்களிப்புடன் பள்ளிக்கூடங்களுக்குச் செல்லுகின்றார்கள். பின்பு, பெரிய "பைபிள்" (Bible) புஸ்தகமே பரிசாகக்

கொடுக்கப்படுகின்றது. இது வேத புஸ்தகமென்றும் இதை மிகவும் ஜாக்கிரதையோடு காப்பாற்றவேண்டுமென்றுஞ் சொல்லி அக் குழந்தைகளிடம் கொடுக்கின்றார்கள். பின்பு ஆங்கிலத்தில் தேர்ச்சியடைய, ஆங்கில வேத புஸ்தகமும் கொடுக்கப்படுகின்றது. முறையே, "சிற்றறிங்கர் குறிப்பிடம்", "நல்லமேய்ப்பன்" என்ற பல புஸ்தகங்களை சரமாரியாய்ப் பொழிகின்றனர். குழந்தைகளும் ஆனந்தசாகரத்தைத் தங்கள் இருப்பிடமாகக் கொள்ளுகின்றனர். இப்புஸ்தகங்களைப் பெற்றபொழுதே, இவர்களுக்கு சாவித்திரி, சீதை முதலிய இந்துமதப் பதிவிரதைகளின் சரிதைகள் எவ்வாறு தெரியும். தெருக்களில்கூட, கிறிஸ்தவர்களைப்பற்றிய கதைகளையும், இயேசுநாதர் ஜனித்ததையும் இயம்புகின்றனர். இக்கதைகளை மிகவும் உருக்கத்துடன் மொழிகின்றனர். பெரியவர்கள் என்ன செய்வதென்று தோன்றாமல் மௌனம் சாதிக்கின்றனர். இப்படியாயின், என் பெண் குழந்தைகளுக்கு கிரிஸ்தவ பாடசாலைகளிலும், மதத்திலும் பற்றுண்டாகாது? அவர்கள் என் அப் பள்ளிகளுக்குச் செல்லாமலிருப்பர்?

பின்னும், இப்பாடசாலைகளில் எங்குபார்த்தாலும் "ஏசுநாதரைத் தொழுங்கள், பரலோகத்தை யடையுங்கள்" என்று எழுதி வைத்திருக்கின்றனர். பல கிரிஸ்தவத் தொண்டர்களின் படங்களையும் தொங்கவிட்டிருக்கின்றனர். எந்த கிறிஸ்தவப் பெண்பாடசாலையிலாவது சரஸ்வதி தேவியின் படம் தொங்கவிடப்பட்டிருக்கின்றதா? இல்லவே இல்லை. தினந்தோறும் காலை, மாலை இருவேளையிலும், இப்பள்ளிக்கூடங்களில் ஜபம் நடப்பதுண்டு. எல்லாப் பெண்களும், தலைகுனிந்து கண்மூடியவண்ணமா யிருப்பார்களந்தச்சமயம். ஜபம் முடிந்தவுடன் யாவரும் "ஆமென்" என்று ஏகோபித்து சொல்லவேண்டும். இது என்னுடைய சொந்த அனுபவம்.

ஆண்டிற்கொருமுறை குழந்தைகளை ஊர்வலம் விட்டு சிலுவையுடன் வருகின்றனர். பல கிரிஸ்தவ கதாகாலக்ஷேபங்களும் நடைபெறுகின்றன. அஞ்ஞான்று இந்தப் பெண்பிள்ளைகள் அழைத்துச் செல்லப்படுகின்றார்கள். மற்றும் இக்குழந்தைகளுக்கு "கர்த்தர் பின்" என்று சிலுவையிட்ட ஊசியைக்கொடுத் தணிபச் செய்கின்றனர். இதைப்பெற்ற அப் பெண்குழந்தைகளடையும் சந்தோஷத்தை இயம்பவும் முடியுமோ? பல கிறிஸ்தவப் பாடல்களும் இவர்களுக்கு போதிக்கப்படுகின்றன. கிறிஸ்தவ நாடகங்களை நடத்தி, அதில் இப்பெண்களுக்கு கிறிஸ்தவ வேஷம் போட்டு ஞானஸ்நானம் முதலியவைகளை நடத்திக் காட்டுகின்றார்கள். நாடகமாடுவதற்கா நாம் பெண்களைப் பெற்றோம்? என்னே விபரீதம். இந்தியர்களைக் கிரிஸ்தவர்களாக்க இதனினும் வேறு வழிவேண்டுமோ? இவ்விஷயத்தில் நாம் நம் கிரிஸ்தவ சகோதரர்களைப் புகழவேண்டியதுதான்! அடுத்தவருஷத்தில் பெண்களுக்கு நாகரீகம் வலுக்க ஆரம்பிக்கின்றது. நெற்றியில் திலகம் வைப்பதும், மஞ்சள் பூசிக்கொள்வதும், தலையை நேராக வாரிக்கொள்வதும் அநாகரீகமென எண்ணி பாழும் நெற்றியையும், பசுமையற்ற

முகத்தையும் உடையவர்களாய், குரங்கிற்கு வேஷம் போட்டாற்போல் கோணவடுவை எடுத்து தலையை பின்னிக்கொள்ளுகின்றார்கள். ஏன் எனில் "கர்த்தர் நமக்குக் கொடுத்த நல்ல நெற்றியைப் பொட்டிட்டு ஏன் அகோரப் படுத்தவேண்டும்" என்ற பாடத்தைப் படித்தவர்களல்லவா? "நீரில்லா நெற்றிபாழ்" என்பதை இவர்கள் எவவாறுணருவார்கள். இவ்வாறு செய்து விட்டு "ஓடுமீனோட ஒருமீன் வருமளவும் வாடியிருக்குமாம் கொக்கு" என்ற வாறு சமயம்பார்த்து இவர்களைத் தங்கள்மதத்திற் கிழுத்துக்கொள்ளுகிறார் கள். இரண்டு வருடங்களுக்கு முன் ஓர் கிறிஸ்தவ சகோதரி ஓர் இந்தியப் பெண்ணை மோசஞ்செய்து கிறிஸ்தவமதத்தில் அப்பெண்ணின் பெற்றோ ரறியாவண்ணம் கொண்டு சென்று திருச்சியில் கிறிஸ்தவமதத்தில் சேர்க் கப் பிரயத்தனப்பட்டதையும், ஜானகியம்மையின் கதையையும் தங்களுக்கு நான் வற்புறுத்தக் கடமைப்பட்டுள்ளேன். "ஆனந்தனும்" அதைக் குறிப் பிட்டான். இந்தக் கெதிதான் மற்றப் பெண்களுக்கும் நேரிடும் என்பதற் கையமுண்டோ?

சகோதர சகோதரிகளே! இதையெல்லாம் நீங்கள் நன்றாகக் கவனிக் கவேண்டும். பத்தாவது வயதில் கிறிஸ்தவத்திற் சேரப்புகும் பெண்களைத் தடுப்பது கண்கெட்டபிறகு சூரியநமஸ்காரம் செய்வதுபோலாகும். குழந் தைப்பருவத்திலேயே அவர்களை கிறிஸ்தவப் பள்ளிக்கூடங்களுக்குப் போ காது தடுத்தல்வேண்டும்.

இனி, ஆடவர்கள் கதியைக் கவனிக்கின் அவர்களுக்குப் பெண்களை விட ஸ்திரமான புத்தி அதிகமாக உண்டாகையால் அவர்களை மயக்கப் பிர யத்தனப்படுவதில் சிலர்தான் அவர்கள் வலையில் சிக்குகினறார்கள். மற் றும், பொருளைக்காட்டியோ, பெண்களைக் காட்டியோ, பெரிய உத்தியோ கங்களைக் கொடுத்தோ அவர்கள் சித்தத்தை மயக்கிவிடுகின்றனர். "உண் மையாய் கிறிஸ்தவமதத்தை நம்பிச் சேர்ந்தவர் இலர்" என்று விவேகாந னந்த சுவாமியவர்கள் கூறியது சத்தியமொழியாகும். கிறிஸ்தவமதத்தைச் சார்ந்தபின் துக்கக்கடலிலாழ்கின்றனர். இவர்கள் வருத்தப்படாதவர்க ளாயின் ஏன் மறுபடியும் தன் சுயமதத்திற்கே வரப் பிரயத்தனப்படவேண் டும்? சுவாமிகளிடம் உத்திரவு கேட்கவேண்டும்? இதினின்றும் கிறிஸ்த வமதத்தில் மோசத்தினால் சேர்ந்தார்களென்ற உண்மை மலையுச்சித் தீபம் போன்று விளஙகவில்லையா? மனைவியை விட்டு பர்த்தாவும், பர்த்தாவை விட்டு மனைவியும், தாயைவிட்டுப் பிள்ளையும், புதல்வனைவிட்டுத் தாயும் சுற் றத்தார்கள் கூட்டமிட்டு கூக்குரலிட்டு அழும்படி விட்டு ஒருவன் கிறிஸ்தவ னாவது எவ்வளவு துக்ககரமான சம்பவம்.

தன் மூக்கையிழந்த மூக்கரையன் பலரும் மூக்கை யிழக்கவேண்டித் தனக்குப் பரமசிவன் தரிசனம் கிடைப்பதாகப் பாசாங்குசெய்ய எல்லோ ரும் பரமசிவனை தரிசிப்பதற்காக தங்கள் நாசியைக் கொய்துகொண்டு மோசம்போனமாதிரி இந்து மதத்தை யிழந்த இந்தியக் கிறிஸ்தவர்கள் மற்ற

பலரையும் கிரிஸ்தவமதத்திற்குக் கூப்பிடுகின்றனர். அந்தோ என்னமோசம். கிரிஸ்தவ சமயத்தில் அநேகமாய்ப் பாமரர்களே சேருகின்றூர்கள்.

பிறரை மோசஞ்செய்து மதத்திற்கு ஆளைச் சேர்க்குமாறு இயேசு கிரிஸ்து மொழிந்தாரில்லை. நாம் கிரிஸ்தவ மதத்தையாவது, ஏசுகிருஸ்துவையாவது, இகழவில்லை என்பதைச் சகோதரர்கள் அறிவார்களாக. ஆனல், இவ்வாறு அநியாயம் செய்யும் நமது கிரிஸ்தவ சகோதரர்களைப்பற்றியே நம்மவர்க்கு எச்சரிக்கை செய்கிறேன்.

ஆகையால், முக்கியமாய் நாம் முதலாவதாக நம் பெண்களையும், இரண்டாவதாக ஆடவர்களையும் கிரிஸ்தவப் பள்ளிகளுக்குச் செல்லாதவாறு தடுத்தல்வேண்டும். பெண்களுக்கு கல்வி இல்லத்திலேயேபோதிக்கப்படவேண்டும். மற்றும் இந்து பாடசாலையில் படிக்கவைத்து, இந்து மதத்தின் கொள்கைகளையும், உண்மையையும், தொன்மையையும், பாஷைகளின் சிறப்பையும் உணர்த்தவேண்டும். சாவித்திரி, சீதை, தமயந்தி, சந்திரமதி முதலியவர்களின் பதிவிரதாதி தன்மையையும், ஸ்ரீராமர், சத்தியவான், நளன், அரிச்சந்திரன் முதலானவர்களின், தந்தைவாக்கிய பரிபாலனம், உண்மை, சத்தியம் முதலான நிலைமைகளையும் போதிக்கவேண்டும்.

மற்றும், செல்வந்தர்களும், அறிவிற் சிறந்தவர்களும் இந்திய பாடசாலைகளை ஸ்தாபனஞ் செய்வதில் முயற்சி எடுத்துக்கொண்டு நமது மதம் வீணுகக் கெடுவதைத் தடுத்தல்வேண்டும். இந்தியா முழுவதையும் கிரிஸ்தவமதமாக்கவேண்டும் என்ற எண்ணமுள்ள பாதிரிகளின் எண்ணத்தைக் களையவேண்டும். இதைக்குறித்து கிராமங்கள்தோரும் தொண்டர்களை அனுப்பவேண்டிய ஏற்பாடுகள் செய்தல்வேண்டும். பாமர ஜனங்களை ஏமாற்றும் வழியைத் தடுத்தலுக்கு இதே முறை. நமதிந்தியப் பெண்களுக்கு இதுவரை உதித்துள்ள கிரிஸ்தவமதப்பற்றைப் போக்கவேண்டும். இவ்விஷயத்தில் மடாதிபதிகளும் அதிகக் கவலை எடுத்துக்கொள்ளக் கடமைபூண்டவராவர். இறைவனும் அருள்பாலிப்பாஞக.

**V. S. வரதராஜ அய்யங்கார்,**
"சரஸ்வதி நிலையம்" உறையூர், திருச்சி.

---

## "உயிர்வதை நீத்தல் விஞு"

மேற்கண்ட தலையங்கமிட்டு, ம-ா-ா-ஸ்ரீ, பா. நெ. தங்கசாமி நாடார். (சிவகாசி) என்ற நண்பவரால் வரையப்பட்ட கீழ்க்காணும் 13 விஞக்கள் "க்ஷத்திரிய மித்திரன்" பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டிருக்கக்கண்டோம்.

### விஞக்கள்.

1. உயிருள்ளதெல்லாம் உயிருள்ள பொருளைத் தின்றே ஜீவிக்கின்றன. மேலான பிராணிகளுக்குக் கீழான பிராணிகள் ஆகாரம். கலப்பற்ற கலமண் தவிர மற்றப் பொருட்களெல்லாம் உயிருள்ளவைகளேயாம். ஆதலால் மனிதன் உயிர்வதை செய்யாமல் உயிர்வாழ்வது எப்படி ?

2. இரத்தம் உள்ள பொருள் யாதும் தின்னக்கூடாது என்றால், பால் குடிக்கலாமா ? மிருகத்தின் ரத்தத்துக்கும் காய்கனிகளின் சாரத்துக்கும் வேறுபாடு உண்டோ ?

3. மச்சமாமிசங்கள் துர்க்கந்தம் வீசுகின்றன வென்றால், காய்கனிகள் துர்க்கந்தம் வீசுகிறதில்லையா ? அழுகி நாறுகிறதில்லையா ? புழுக்கிறதில்லையா ? வயிற்றுக்குள்ளே செல்லுகிற எந்தப் பதார்த்தம் நாறாது ?

4. சைவசித்தாந்தத்தின்படி தாவர ஜீவனுக்கும் மிருக ஜீவனுக்கும் வேறுபாடு யாது ? எல்லாம் ஆன்மாக்களோ ? வெவ்வேறோ ?

5. குறைந்த அறிவுள்ள உயிர்களைக் கொல்வது பாவமில்லை யென்றால், குறைந்த அறிவுள்ள சிசுக்களை வதைப்பது பாவமல்லவோ ? எப்படி ?

6. தாவர வுயிரைப் போக்குவதற்குப் பிராயச்சித்தமுண்டென்றால், மற்ற உயிரைப் போக்குவதற்குப் பிராயச்சித்தமில்லையோ ? எப்படியும் உயிர் உயிர்தானே ! எல்லாம் ஆன்மாக்கள் தானே !

7. குடிக்கிற தண்ணீரிலும் சுவாசிக்கிற ஆகாயத்திலும் ஆயிரக்கணக்கான சிற்றுயிர்கள் இருக்கின்றன. ஆதலின் ஒருமுறை மூச்சுவிடுவதாலும் கணக்கற்ற வுயிர்கள் நாசமடைகின்றன. இங்ஙனம் ஒருவன் ஒருநாளில் கொல்லுகிற உயிர்களுக்குக் கணக்கு வழக்கில்லை. இப்பாவம் எப்படித் தொலையும் ?

8. இருக்கு முதலான வேதங்கள் நமது சிவ மதத்துக்குப் பிரமாணமாகக் கொள்ளப்படுகின்றன. அவ் வேதங்களில் மிருகபலி செலுத்துவது கடவுளுக்கு உகந்த வழிபாடு என்று சொல்லியிருக்கிறது. இதற்கு நியாயமென்ன ?

9. சிவபெருமான், மகாவிஷ்ணு, பார்வதி தேவி முருகக் கடவுள் முதலியோர் உயிர்வதையை வெறுக்கின்றனர் என்று சாஸ்திரோக்தமாக நிரூபித்தல் கூடுமோ ?

10. தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் கொல்லாமை, புலான் மறுத்தல் என்னும் இரு விரதங்களையும் இல்லறத்தார்க்கு விதிக்காமல் துறவறத்தார்க்கு விதித்த தெங்ஙனம் ?

11. க்ஷத்திரிய வருணத்தார் மாம்ச போஜனஞ் செய்வது பாவமோ ? எங்ஙனம் ? இந்தியாவின் வடபாகத்திலுள்ள பிராமணர் மாம்ச போஜனஞ் செய்வதற்குக் காரணமென்ன ?

12. கொல்லாமை, புலால் மறுத்தல் என்பன புத்தசமயக் கொள்கையோ ? சிவமதக் கொள்கையோ ? இந்தக் கொள்கை உண்டாகி எவ்வளவு காலமாகிறது ?

13. சைவன் என்றால் யார் ? எவ்வளவு துன்மார்க்கமாய் நடந்தாலும் மாமிச போஜனத்தை மட்டும் நீக்கிவிட்டால் ஒருவன் சைவன் தானா ?

---

சிலர் இத்தகைகளை கேள்விகளைக்கொண்டு கொன்று தின்பதில் பாபமில்லையெனத் தீர்மானிக்கக் கருதுகிறார்கள். ஆகையால் இதைப்பற்றி வரையவேண்டியது அவசியமெனத் தோன்றியது.

மேற்கண்ட வினாக்கள் ஒவ்வொன்றிற்கும் விடை யளிப்பதாயின் கூறுவதையே கூறவேண்டி வரும். இப்பதின் மூன்று வினாக்களையும் பின் காணும் ஐந்தாறு வினாக்களி லடக்கிவிடலாம் :—

1. எல்லாம் ஆன்மாக்களாயிருக்க மிருக பட்சிகளைக்கொன்றால் மட்டும் பாபம் தாவரங்களைக்கொன்றால் பாவமில்லை என்பதெப்படி ?

2. பசுவைக்கொன்று தின்றால் பாவமெனின் அதன் பாலே யருந்துகிறோமே. அது இரத்தமல்லவா ?

3. நாம் அருந்தும் ஜலத்தில் அனேகம் கிருமிகளிருக்கின்றனவே, அதனால் பாவமில்லையா ?

4. வேதத்தில் யாகம் செய்யும்போது பலி கொடுக்கச சொல்லியிருக்கிறதே. அது கொலே யல்லவா.

5. கொல்லாமை எம்மதக்கொள்கை ? நாயனார் துறவறத்தார்க்குமட்டுந்தானே கூறினார் ?

6. சைவன் என்றால் எவ்வளவு துஷ்டனயிருந்தாலும் மாமிச போஜனத்தைமட்டும் நீக்கிவிட்டால் சைவன் ஆகி விடுகிறான ?

விடை

1. ஆன்ம சொரூபம் எங்கும் ஆகாயம்போல் உள்ளும் புறம்பும் வியாபித்தேயிருக்கிறது. அது இல்லாத விடமில்லே. கல்லில் அது இருந்திராவிட்டால் பிரகலாதனுக்காக கற்றூணிலிருந்து பகவான் தோன்றியிரார்.

இப்போது புலாலுண்ணல் பாபம் என்பது எதனுலெனில் அதற்காக ஒன்றைக் கொலே செய்வதால்தான். ஒரு ஜீவனைக் கொலே செய்வதால் அது எவ்வளவோ பீதியும் சொல்லொணு இம்சையும் அடைகிறது. இதனால்தான் கொலே செய்யலாகாதென்பது. இயற்கை மரணமடைந்த சவத்தைத் தின்பதால் தமோகுண முண்டாகுமேயன்றி கொலே பாதகம் உண்டாகாது.

இனி ஆன்ம சொரூபம் எங்கும் நிறைந்திருப்பினும் அதன் நிலேமையில் மாறுபாடுண்டு. கல் மண் முதலியவற்றில் ஆன்மா துரிய நிலேயிலிருக்கிறது. அறிவு விளக்கம் சற்றும் இல்லே. மரம் செடி முதலிய தாவரவர்க்கங்களுக்கு ஸ்பரிச உணர்சசியாகிய ஒரு அறிவுமட்டுமே யுண்டு. அவற்றின் இலே மலர் காய் கனியாதிகளேப் பறிப்பதால் அவற்றுக்கு உணர்சசி தோன்றுது. நமது தேகத்திலுள்ள உரோமம் நகம் முதலியவற்றைக் கழித்தால் நமக்கு எப்படி உணர்சசி தோன்றுவதில்லேயோ அப்படியே. அதோடு மனிதன் ஒரு மரத்தை வெட்டிவிட்டால் அது மறுபடி துளிர்த்து உஜ்ஜீவிக்கும். அத்தகையவை யனேகமுள. மேலும் மனிதனும் அவற்றை யுற்பத்தி செய்யக்கூடும். ஆதலின் அவற்றை யுண்பதால் பாபமில்லே. ஒரு சீவன் இம்சைப்படும்படிசெய்வதே பாபம் என்பதுதான் இதன் முக்கிய நோக்கம்.

குறைந்த அறிவுள்ளவைகளேக் கொன்றால் பாபமில்லேயெனில் குழந்தையைக் கொன்றால் பாபமில்லேயேயென்று நமது நண்பர் கேட்பது நியாயமே. பகுத்தறிவில்லாததாலேயே ஆன்மா இல்லேயென்று கருதுவது ஆன்ம லக்ஷணம் அறியாத் தன்மையேயாகும். பகுத்தறிவு அறிவின் வளர்ச்சியில் ஒருபாகமேயன்றி வேறில்லே. எப்போது இம்சைப்படுகிறதோ அப்போது அதில் ஆன்மா இருக்கவேயிருக்கிறது. நித்திரையில்கூட பகுத்தறிவில்லே. அப்படியானால் தூங்குகிறவர்களேக் கொன்றால் பாபமில்லே யென்பதோ ? அதுதான் பெரும்பாதகம் என்று கூறப்பட்டருக்கிறது. பெரிய ஜீவன்களெல்லாம் சிறு ஜீவன்களே யுண்டே ஜீவிக்கின்றனவென்று கருதலாகாது. அனேக ஜீவன்கள் கந்த மூலாதிகளேயே யுண்டு ஜீவிப்பது பிரத்தியட்ச அனுபவம்.

2. பசுவின் பாலே யருந்துவதாலேயே அதைக்கொன்றால் பாபமில்லே யென்று கூறுவது விஷயமறியாத தன்மையாகும்.

இரத்தமே பாலாக மாறுகிறதுண்மையே. தாயின் பாலை யருந்தி னோம். தாயைக்கொன்றால் பாதகமில்லையே? என்ன அறியாமையிது! பாலைக் குடிப்பவனே இரத்தத்தைக் குடிப்பானோ? இல்லை. என்? இரத்தமே பாலாக மாறினும் இரண்டின் குணங்களிலும் நேர்மாறான வித்தியாசமிருக்கிறது. அரவின்விடம் கொடிது. வெறுக்கத்தக்கது. அது முதிர்ந்து மாணிக்கமாயின் எவ்வளவு கௌரவமும் முடி மன்னரின் கிரீடத்தில் ஏறும் யோக்கியதையும் பெறுகிறது. ஒருதுளி மழை நீர் பயன்றறது. அது இப்பியின் வயிற்றில் சேர்ந்து முத்தாய் மாறியபோது மிக மதிப்புள்ளதாய் விடுகிறது. அவ்வாறே இரத்தம் அசுத்த பதார்த்தமே. ஆனால் அது பாலாக மாறியதே அமிர்தமாகிறது. மிக்க யோக்கியதையும் மதிப்புமுடையதாய் விடுகிறது. மகா வுத்தமமும் பரிசுத்தமுமான உண் பொருளாய் மாறி விடுகிறது. பசுவின் பாலை யருந்துவதிலும், கன்றுக்குப் பால் போதுமான வரைவிடாமல் கறந்து கொண்டால் பாதகமேயாகும்.

3. மனச் சிந்தனைப்படியே கர்மம் ஏற்படுகிறது. ஆதலின் மனமறிந்து செய்வதே பாபம். நடக்கும் போதும், சலமருந்தும் போதும் கண்ணுக்குத் தெரியாத அனேகம் உயிர்களைக்கொன்று விடுகிறோமென்ற உத்தேசத்தால் எதைக் கொன்றாலும் பாபமில்லை எனக்கருதுவது வீண் குதர்க்க வாதமேயன்றி வேறில்லை. அறிந்து மனம் சம்மதித்துச் செய்யும் கொலையே (அது புழுவாகட்டும் எறும்பாகட்டும்) பாபமாகும்.

4. முற்காலத்தில் யாகத்தில் மிருகபலி கூறப்பட்டிருந்தது உண்மையே. அக்காலத்தில் யாகம் செய்வோர்க்கு அம்மிருகத்தின் ஆன்மா வேதனையின்றி மேலான பதவியை யடையும்படிச் செய்யும் வல்லமையிருந்தது. அது முன் யுகத்தைப் பொருத்தது. இக்கலியுகத்தைச் சேர்ந்ததல்ல. அதோடு போக இச்சை யுடையோரே அதைச் செய்வது. ஞான காண்டத்தில் யாக பலி கூட நிஷேதிக்கப்பட்டே யிருக்கிறது.

5. ஆஸ்திகமத மனைத்துமே சீவ இம்சையை நிஷேதித்துக் கூறுகின்றன. அவற்றில் நமது மதத்திலும், புத்த சமணமதங்களிலும் அது மிக்க அதிகமாய்க் கண்டிக்கப்பட்டிருக்கிறது. சைவமதத்திற்குக் கொல்லாமையே அடிப்படை. அதனாற்றான் சாதாரணமாய் மாமிசம் முதலியவற்றைப் புசியாத ஒருவனை "அவன் சைவமாய்விட்டான்" என்று கூறுவது உலக வழக்கமாய்விட்டது.

சில மதஸ்தாபனர்கள் அவ்வக்காலத்திற்கும் இடத்திற்கும் தக்கவாறு ஜீவ இம்சையாகாதென்பதை ஒருவித வரையறுப்போடும் கூறியிருக்கிறார்கள். ஏனெனில் மாமிச மச்சாதிகளை ஆதிமுதல் சதா உண்டுகொண் டிருப்போரை யடியோடு அதை விட்டுவிடச் சொன்னால் அது ஆகாத காரியமாவதோடு, மதாசாரியர் கூறும் மற்ற போதனைகளையும் அவர்கள் அடியோடு நிராகரித்துவிட்டு நல்வழியிற்றிரும்பாமல் அழிந்து போவார்கள் என்பதனாலேயே. காலை முதல் மாலை வரைச் சாராயங் குடித்துக்கொண் டிருப்பவனுக்கு "நீ போசனம் அருந்தும்போதுமட்டுங் குடி" என்று முதலில் புத்தி கூறுவதுபோல் கூறினார்கள்.

நாயனார் "கொல்லாமையைப்பற்றி கூறியது துறவறத்தார்க்குமட்டு மன்று. துறவறத்தார்க்கு அது சற்றும் பொருந்தாததாதலின் அதை அருளுடைமையின் பின் வைத்துக் கூறினாரன்றிவேறில்லை. அது பொது விதியேயாகும். அப்படிக் கருதினால், இன்னாசெய்யாமை—வெகுளாமை—கள்ளாமை யாவுமே துறவறத்தார்க்குமட்டும் கூறினாரென்று கருதுவதோ?

அது பெருந்தவறு. இவை யாவும் எல்லார்க்கும் பொதுவாகக் கூறப் பட்டவையே.

6. மாமிசமருந்தாததனல் மட்டுமே ஒருவன் சைவனுகிவிடமாட்டான். குழந்தைப் பருவத்திலிருந்து அப்பழக்கமில்லாமலிருந்தால் யாரும் அப்படி நடந்து கொள்ளலாகும்.

எவன் தன்னுயிரைப்போல் மன்னுயிரனைத்தையும் கருதும் சீவகாருண்யமும், பரமசிவனிடத்தும், சிவனடியாரிடத்திலும் பூரண பக்தியும் உடையவனுயிருக்கிருனே அவன்ருன் சைவன். "சிவனடியாரைச் சிவனென நினைபவன் எவன் அவன் சிவனே" என்றனர் ஆன்ருேர். இன்னும் யாவற்றையும் சக்ஷாத் பரசிவ சொரூபமாகவே காண்பவன் எவனே அவனே சரியான சைவனெனத் தக்கவன். ஆதலின் ஒரு ஜீவனுக்கு இம்சை யுண்டாகும்படிச் செய்வதே பாதகச்செயல் என்றும் அது தாம் படைத்த எல்லாச் சீவர்களிடத்தும் கருணை நிறைந்தவராகிய பகவானுக்கு சற்றும் ஒவ்வாத காரியமென்றும் நாம் கருத வேண்டும்.

ஆன்ருேரும் சாத்திரங்களும் கூறியுள்ளவற்றையே நாம் கூறினேமன்றி நாமே யொன்றும் கூறவில்லை. நீடன்.

---

## பகவத்கீதை வசனம்.

(196-ம் பக்கத் தொடர்ச்சி.)

(இச்சீவான்மா எக்காலத்தில் மனம் முதலிய ஆறு இந்திரியங்களையும் ஆகர்ஷணம் செய்கின்ருன் என்ற அர்சசுனன் சங்கைக்குப் பகவான் கூறியருள்கின்ருர்.)

ஏ பார்த்த! மலர்களிலுள்ள இனிய மணத்தைக் காற்ருனது எப்படி கிரகித்துக்கொண்டு செல்கின்றதோ அவ்வாறே ஈசுவர அம்சமாகிய சீவன் ஓர் சரீரத்தைவிட்டு நீங்கும்போது மனம் முதலிய ஆறிந்திரியங்களையும் கிரகித்துக்கொண்டு செல்வான். நிலையில்லாத தேகத்தை விடுவதும் அடைவதுமாகிய இச்சீவான்மா சுரோத்திரம் முதலிய இந்திரியங்களை ஆசிரயித்தே சப்தம், இரசம், ரூபம் முதலிய விடயங்களை நுகருகின்ருன்.

அத்தன்மைய ஆன்மாவை அசுத்த அந்தக்கரணமுடைய அவிவேகிகள் முயற்சிசெய்தாலும் காணுர்கள். சுத்த அந்தக்கரணமுடைய அறிவாளிமட்டுமே ஞானத்தாலும் தியானுதியோகங்களாலும் பிரத்தியட்சமாயறியாநிற்பர். இவ்வான்மாவின் சுபாவத்தை இன்னும் கூறுதும் அறிவாயாக.

ஏ தோள்வலியுள்ள வீரனுகிய அர்ச்சுனு! சட்சு முதலிய இந்திரியங்களைப் பிரகாசிப்பிக்கும் ஒளி நானுகவிருக்கிறேன். சர்வ அண்டங்களுக்கும் ஒளியளிக்கும் சூரியசந்திர அக்கினியாகிய இவைகளினிடத்துள்ள பிரகாசமும் நானுகின்றேன். பிருதிவிரூபமாக நின்று அதற்குக் கந்தமும், எனது பலமாகிய உரத்தையும் அதில்வைத்து அதிலுள்ள தாவரஜங்கம ரூபமான யாவற்றையும் தாங்கி நிற்பவனும் நானுகவே யிருக்கிறேன். ஆகாயத்தினிடத்தில் சர்வ ரசங்களின் ஆகாரமான சந்திர ரூபமாய் நின்று உண்ணத்தக்க பண்டங்கள் யாவற்றிற்கும் அததற்குத் தகுதியான சுவையை யளித்து அவைகள் கெடாதபடி வளர்க்கின்றவனும் பரமேசுரனுகிய நானுகின்றேன். தின்பன, நக்குவன, சுவைப்பன, உண்பன என்ற நான்கு வகையாகவுள்ள உணவுப்பொருள்களும் சுகத்திற்கேதுவாகும்படி, பிராணிகளின் சரீரங்கள்தோறும் ஜடராக்கினியாய் நின்று அவ்வுணவுப்பொருள்கள் ஜீரணிக்குமாறு பக்குவப்படுத்துவோனும் நானே.

ஏ பார்த்த! புண்ணிய கருமங்களையுடைய நல்ல மாந்தரின் சிறந்த அறிவும், பாபிகளாகிய கெட்ட மாந்தரின் அற்ப அறிவும் நானேயன்றி வேறில்லையென்றறியக்கடவாய். நான்கு வேதங்களின் பொருள்களை யறிபவனும், அவ்வேதங்களின் மெய்ப்பொருள்களைச் சுரங்களினால் போதிக்கும் ஆசாரியனும் நானாகவே யிருக்கின்றேன்.

(இப்போது பகவான் அழியும் பொருள் இன்னது அழியாப்பொருள் இன்னதென அருளிச்செய்கின்றார்.)

ஏ பற்குன! இன்னொரு விஷயமும் கூறுகின்றோம் கேட்பாயாக. அதாவது, இப்பிரபஞ்சத்தின்கண்ணே அழிதலையே உருவமாக உடைய ஒரு பொருளும், அருவமாய் எதனாலும் அழிவில்லாமையாகிய தன்மையை யுடைய ஒரு பொருளும் உண்டு. அழிவது அழியாதது என்ற இந்த இரண்டு பொருள்களையும் அறிவினால் நன்றாக உற்று நோக்கி ஆராய்ந்திடின், பிரம்மாமுதல் ஸ்தாவர மீறாகவுள்ள நாமரூபத் தோற்றமான சரீரங்களனைத்தும் அழியுமென்றும், நாமரூபமற்ற ஆன்மா அழியாததென்றும் விளங்கும்.

(இப்போது பகவான் மேற்கண்ட இருவகைப் பொருள்களுக்கும் விலட்சணனாய் அவற்றோடு தாக்கற்று நிற்கும் பரமான்ம சொரூபத்தைப் பற்றி அருளிச்செய்கின்றார்.)

ஏ பார்த்த! அழிவதுமழியாததுமாகிய இருவகைப் பொருள்களுக்கும் அந்நியமாய், அவற்றின் தோஷங்கள் ஒன்றும் பற்றாமல், உற்பத்தி நாசமின்றி, எவ்வகைக் குறைபாடுமின்றிச் சகலப் பிரபஞ்சங்களிலும் தனது சக்தியால் வியாபித்து நிற்பது எதுவோ அதுவே சச்சிதானந்த சொரூபமாகிய பரமான்மா என்பது.

இத்தகைய நிர்விகார நிரதிசயானந்த ரூபியாகிய என்னை யுள்ளவாறு உள்ளத்தில் அறிந்தவர்கள் எவ்விதப் பந்தமுமடையார். அனாதியாய் ஆதி காரணனாயுள்ள இப்பரமான்மாவிற்கு ஆதியும் அந்தமும் உண்டென்று கூறமுடியாது.

ஏ பார்த்த! இருக்காதி நான்கு வேதங்களையும் மொத்தமாய்ச் சொல்லத் தொடங்கினும் இப்பரமான்ம ஞானம் கொஞ்சமும் சொல்லக்கூடியதன்று. உலகமே இதை யறிந்திலது. இத்தகைய மிகவும் இரகசியமான ஒன்றைத் தோழனாகிய உன்மேல் வைத்த கருணையால் உனக்கு உபதேசித்தோம். இதையுடையவன் ஆன்மஞானம் பெற்று முத்தியின்பெய்துவன்.

பதினைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## 16-வது, தேவாசுர சப்பத்து விபாகயோகவத்தியாயம்.

[முன் அத்தியாயத்தில் பகவான் கூறியருளிய, மநுடதேகத்தில் பூர்வம் செய்துள்ள சுபாசுப கர்மங்களின் வாசனையை தெய்வசம்பத்து அசுர சம்பத்து என இரண்டாய்ப் பிறித்து விவகரிக்கிறார். இவற்றில் தெய்வசம்பத்து என்ற சுபவாசனை மோக்ஷத்திற்கேதுவாதலால் கொள்ளத்தக்கதாகும். அசுரசம்பத்தென்ற அசுபவாசனை பந்தத்திற்கு ஏதுவாதலின் தள்ளத்தக்கதாகும். ஆனால் ஒன்றைக் கொள்ளற்கும் மற்றொன்றைத் தள்ளற்கும் அவற்றின் தன்மை தெரிந்தாலன்றி கூடாது. ஆதலின் ஸ்ரீபகவான் அந்த இரண்டு சம்பத்துகளின் சொரூபத்தையும் அருளிச்செய்கின்றார்.]

ஏ பார்த்த! இப்பூவுலகின்கண்ணுள்ள மாந்தர் தேவர் அசுரர் என்ற

இரு பகுப்பினராய் வாழ்வார்கள். அவர்களுடைய சுபாவங்களைக் கூறுகிறோம் கேட்பாயாக.

(முதலில் பகவான் கொள்ளத்தக்கதான தெய்வ சம்பத்துடையோரின் சுபாவத்தை யருளிச் செய்கின்றார்.)

ஏ அரிய காண்டீபமெனும் வில்லையேந்திய அர்ச்சுனா! பயமின்மை, அந்தக்கரணங்களைச் சுத்தியாக்குதல், சித்தத்தை ஆன்மாவின்கண் சலனமின்றி நிறுத்தல், ஆன்மசொரூப நிச்சயத்தில் திடம்பெற்றிருத்தல், கோபமின்மை, சத்தியம் மொழிதல், தியானம் தவம் உடைமை, வேத ஆராய்ச்சி செய்தல், தன்னைப் பெருமையாக எண்ணாமை, கோட்சொல்லாமை, கொல்லாமை, அன்னியர் செய்யும் அபசாரங்களைச் சகித்தல், பெருந்தன்மையான நடக்கை, தானதர்மங்கள் செய்வதில் விருப்பம், சகல ஜீவர்களிடத்திலும் கருணை, அகக்கரண புறக்கரண சுத்தம், இந்திரியங்களை விஷயங்களில் செல்லாதபடி தடுத்துத் தன்வயப்படுத்தல், ஆகிய குணங்களையுடையோரே தேவசம்பத்துடையவர்களாம்.

(இனிப் பகவான் தள்ளத்தக்கதான அசுரசம்பத்துடையோரின் சுபாவத்தை யருளிச்செய்கிறார்.)

ஏ பார்த்த! இனித் தீயசெயல்களைச் செய்யாநிற்கும் அசுர சம்பத்துடையவர்களின் சுபாவத்தைக் கூறுகிறோம். அவர்கள் இன்னது செய்யத்தக்கது என்றும் இன்னது செய்யத் தகாதென்றும் அறியமாட்டார்கள்; இந்திரிய சுத்தத்தையும் புனிதமாகிய ஆசாரங்களையும் கைவிட்டவர்கள்; சத்தியமில்லாதவர்கள்; அவிவேகமுடையோர்; ஜகத், அதைச் சிருட்டிக்கும் கடவுள் ஒருவர், பாவபுண்ணியம் இவை யாவும் பொய்யென்று கருதுவோர்; பெண் ஆண் இரண்டின் சேர்க்கையால் இயற்கையாகவே யாவும் உண்டாகின்றனவாதலால் ஈசுவரன் முதலியவை அனாவசியம் என்று வாதிப்போர்.

("யாவும் பஞ்சபூதங்களின் சேர்க்கையாலும் ஆண் பெண் சேர்க்கையாலுமே இயற்கையாகவே உண்டாகின்றன. மற்றப்படி ஈசுவரன் பாப புண்ணியம் முதலிய யாவும் பொய். இவ்வுலகபோகத்திற்கு மிஞ்சிய போகம் வேறில்லை. இவ்வுலக போகங்களில் ஸ்திரீ போகமே யாவற்றினும் உயர்ந்தது. மாதரே பெண்தெய்வம்" என்று இவ்வாறு கருதுவோர் உலகாயதர் எனப்படுவார்கள்.) (தொடரும்.) சீடன்.

---

# ஓர் முக்கிய விளம்பரம்.

## விஷயதானம் புரிவோர்க்கு.

1. வியாசம் அனுப்புவோர் கடிதத்தின் ஒரு பக்கத்தில்மட்டுமே தெளிவாய் வரையவேண்டும்.

2. ஒரு மாதத்தில் அனுப்பப்படும் வியாசம் அடுத்த சஞ்சிகையிலேயே பிரசுரிக்கப்படுமென்று எதிர்பார்க்கலாகாது. ஆயினும் அது அம்மாதமே வெளிவந்தால்தான் பயன்படும் என்று தோன்றின் வெளியிடப்படும்.

3. பிரசுரிக்கப்படாத வியாசம் எக்காரணத்தாலும் திருப்பியனுப்பப் படமாட்டாது. பிரசுரிக்கப்படாததற்குக் காரணம் கேட்கும் கடிதங்களுக்குப் பதில் வரைய அனுகூலப்படாது.

பத்திரிகாசிரியர்

# ஓர் அறிவிப்பு.

## ஏமாற்றம்.

சகோதர சகோதரிகளே! இரண்டொரு நண்பர்கள் தாங்கள் சில சஞ்சிகைகளுக்குப் பணம் கட்டியதாகவும், ஒன்று இரண்டு சஞ்சிகைகளுக்குப் பின் வரவேயில்லையென்றும், பத்திரிகாசிரியருக்கு எத்தனைக் கடிதங்கள் வரைந்தாலும் பதிலே வரவில்லை யென்றும் இந்த மோசச் செயலைப்பற்றி ஆனந்தனில் வெளியிடவேண்டுமென்றும் நமக்கு எழுதுகிறார்கள்.

இக்காலத்தில் சிலர் வரும்படி ஒன்றைமட்டும் கருதியே, மற்றொரு பத்திரிகையின் பெயரைப்போல் தோற்றும்வண்ணம் போலிப்பெயர் வைத்து ஒரு பத்திரிகையோ சஞ்சிகையோ பிரசுரிப்பதாய், யாவரும் நம்பும்வண்ணம் விளம்பரம்செய்து விடுகிறார்கள். ஜனங்கள் நம்பி வருட சந்தாவை யனுப்பிவிடுகிறார்கள். பிறகு ஒரு மாதமோ இரண்டுமாதமோ சஞ்சிகை வருகிறது. பிறகு மறைந்துவிடுகிறது. வாங்கியபணமும் திருப்பியனுப்பப்படுவதில்லை. இவர்கள் செய்கையால் ‘ பத்திரிகை ’ என்ற பெயருக்கே அகௌரவமுண்டாகிறது.

இன்னொரு நண்பர் “திரிபுரசுந்தரி சக்கரம்” என்பதற்காக ரூ. 1-14-0 அனுப்பியதாகவும் அதைப்பற்றிய விளம்பரத்தில், அத்தேவதை தாமரைமலரின்மேல் 5 வயது பெண்பிள்ளையாகத் தரிசனம் தருவாள் என்று கூறப்பட்டதுபோல் நடக்கவில்லை யென்றும் முறையிட்டுக்கொள்ளுகிறார். அந்தோ ! பராபரையாகிய மகாசத்தியின் தரிசனம் இவ்வளவு சுலபத்தில் கிடைக்குமென்று நமது நண்பர் நம்பியது நமக்குப் பெரும் வியப்பாக விருக்கிறது.

இக்காலத்தில் ஜீவனார்த்தத்திற்காகப் பலவிதச் சூதுவாது தந்திரங்கள் நடைபெறுகின்றன. இது கலிகால வியற்கை. இதைப்பற்றி நாம் ஒன்றும் கூறுவதற்கில்லை. நாம் கூறுவதென்னவெனில், எதையும் முன்னடி தீர ஆலோசித்துப் பார்த்தால் இது நடைபெறும், பெறாதென ஏறக்குறைய (நாமேயாவது நம்மிலும் சிறந்த அறிவாளிகளைக் கேட்டாவது) அறிந்துகொள்ளலாம். அதைவிட்டு விளம்பரத்தைக் கண்டதும் அரிச்சந்திரன் வாக்காய் நம்பிக்கொண்டு பணத்தை யனுப்பி ஏமாற்றமடைந்தபின் சஞ்சிகையில் பிரசுரிக்கும்படி நமக்கு வரைவதைவிட நேரே பணம் பெற்றவர்களோடு விவகாரம் வைத்துக்கொள்வதே நலம் என்று தெரிவித்துக்கொள்கிறோம்.

பத்திரிகாசிரியர்.

---

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(199-ம் பக்கத் தொடர்ச்சி.)

**லாயர்** :—“ இங்கென்னவோ பெரிய தவறு ஏதோ நடந்திருக்கிறது. எனக்கொன்றும் விளங்கவில்லை ” என்றான்.

இதற்குள் மலையாளத்தான் சற்று சமாளித்துக்கொண்டு “ இது தப்பிதத்தினாலேயே நடந்தது ” என்றான்.

**கறுப்** :—“ எவ்வாறு இத்தப்பிதம் நேர்ந்தது?” என்றான்.

**லாயர்**:—“ நான் நீயிருக்கும் அறைக்கு வரவேண்டுமென்று இருட்டிலேயே வந்துகொண்டிருந்தேன். திடீலென்று ஒரு மனிதன் என்மேற் பாய்ந்தான் ” என்றான்.

அப்போது மலையாளி “நான் என்எதிரில்வந்தது அச்சுதன் என்றெண்ணிக்கொண்டேன் ” என்றான்.

**கறுப் :—**" சரி இதில் ஏதோ பெரிய மர்மம் இருக்கிறது. பேசாமல் வாருங்கள். நமது அறைக்குச் சென்று பேசுவோம் " என்று கூறி இருவரையும் அழைத்துக்கொண்டு புத்தகசாலைக்குச் சென்றான்.

அறைக்குள் சென்று உட்கார்ந்ததே லாயர் " இத்தவறு எப்படி நேர்ந்தது ? நான் உண்மையை யறியவேண்டும்" என்றான்.

ஏனெனில் அவன் மனதில் பெரிய சந்தேகம் உண்டாய்விட்டது. அதாவது, "இவர்களிருவரும் நமது குமஸ்தாவைக் கொன்றுவிட்டார்கள். இப்போது நம்மையும் கொன்றுவிட்டால் தங்கள் இரகசியமறிந்த ஆட்கள் அடியோடு ஒழிந்துவிடுவார்களென்று கருதுகிறார்கள்" என்று அவன் மனதில் தோன்றிவிட்டது.

**மலை :—**நான் நீ ஆவேசமென்று தவறாய் நினைத்துக்கொண்டேன் " என்றான்.

**லாயர் :—**யாருடைய ஆவேசம் ?

**மலை :—**அச்சுதனுடைய ஆவேசம்.

**லாயர் :—**கொலை பாதகனே இது உதவாது. ஆவேசத்தை நம்பி யாரும் ஈட்டியால் குத்த முயலமாட்டார்கள் " என்று மிக்க கோபத்தோடு கூறினான்.

அதன்மேல் கறுப்பண்ணன் எழுந்து முன் வந்து, அச்சுதன் திடீ லென்று அவர்கள் முன் தோன்றிய சங்கதியையும் பின்பு நடந்த விஷயங்களையும் விபரமாய்க் கூறினான். அதைக்கேட்ட லாயர்,

" ஆ ! அவன் இங்கும் வந்தானோ !" வென்று வியப்போடு கூறினான். கறுப்பண்ணன் ஆம் என்றான்.

**லாயர் :—**" அவன் வந்து எந்நேரமாயிருக்கும் ?" என்றான்.

**கறுப :—**அவன் இதை விட்டுப்போய் கால்மணி நேரமாயிருக்கும்.

**லாயர் :—**அது ஆவேசமென்றே நீங்கள் எண்ணிக்கொண் டீர்களோ ?

**மலை :—**ஆம் முதலில் அப்படியே யெண்ணிக்கொண்டோம். பிறகுதெரிந்து விட்டது.

**லாயர் :—**அப்படி யிருந்தும் என்னை யேறக்குறைய கொன்றுவிட விருந்தாயே !

**மலை :—**நான் ஏறக்குறைய மடிந்து போயே யிருப்பேன்.

**கறுப் :—**" நான் உதவிக்கு வராதிருந்தால் நீ மடிந்துபோயே யிருப்பாய் " என்றான்.

இதைக்கேட்ட மலையாளியின் முகத்தில் ஒருவித மாறுதல் உண்டாயிற்று. அவன் கறுப்பண்ணனை நோக்கி புன்னகை புரிந்து மௌனமாயிருந்தான்.

**லாயர் :—**அச்சுதன் என்னிடம் வந்திருந்தான் " என்றான்.

**கறுப் :—**எப்போது ?

**லாயர்:—**இரவு முன்னேரத்தில். நல்லது இப்போது மடிந்துபோனான் என்று நீங்கள் என்னை நம்பும்படி செய்த அம் மனிதன் எப்படி உயிரோடு என் முன் வந்தான் ?

**கறுப் :—**நீ மயானத்திற்கு அனுப்பப்பட்ட மனிதன் இறந்தே போனான்.

**லாயர் :—**நான் அச்சுதனையே மயானத்திற் கனுப்பினேன்.

**கறுப் :—**ஒரு சமயம் அவன் வேறு யாரையேனும் தனக்குப் பதிலா யனுப்பியிருப்பானோ ?

**லாயர் :—**அதென்னவோ யெனக்குத் தெரியாது. இதில் ஏதோ பெரிய மர்மம் இருக்கிறது.

**கறுப் :**—அச்சுதன் சாகவில்லையென்று நன்ருய்த் தெரிகிறது.
**லாயர் :**—சந்தேகமின்றி தெரிகிறது.
**கறுப் :**—"இந்த மலையாளி தடை செய்யாதிருந்தால் அவன் இறந்தே போயிருப்பான்" என்று தான் சுடப்போனதையும் மலையாளி தடுத்ததையும் கூறினுன்.
**லாயர் :**—அவனுல் நமக்கு மிக்க ஆபத்துண்டாகும்.
**கறுப் :**—அவனை நாம் கட்டாயம் ஒழித்து விடவேண்டும்.
**லாயர்:**—ஆலசியமின்றி அவன் உடனே கொல்லப்படவேண்டும்.
**கறுப்:**—முன்னே நாம் இந்த மர்மத்தைத் தெரிந்து கொள்ளவேண்டும்.
**லாயர்:**—எப்படி?
**கறுப்:**—சவங்கள் சோதனைக்காக வைக்கப்பட்டிருக்கும் சவக்கிடங்கிற்குச் சென்று பார்க்கவேண்டும்.
**லாயர்:**—என்னத்திற்காக?
**கறுப்:**—"மலையாளியால் கொல்லப்பட்டவன் யாரென்று தெரிந்து கொள்ள?" என்ருன்.

இதன்மேல் இவர்கள் மூவர்களும் நாளைகாலை புறப்பட்டு சவக்கிடங்கிற்குச் செல்வதென்று ஏற்பாடு செய்துகொண்டார்கள்.

---

## 8-வது அத்தியாயம்.

முன் அத்தியாயத்தில் கூறியபடி கறுப்பண்ணனும் லாயரும்மட்டும் சவக்கிடங்கிற்குச் செல்ல ஆயத்தமாய்ச சந்தித்தார்கள்.

மலையாளி தன் கையால் கொல்லப்பட்ட சவத்தைப்பார்க்கத் தைரியமில்லாதவனுய் அவர்கள் கூடச்செல்லப் பயந்துவிட்டான்.

கறுப்பண்ணனும் லாயரும்மட்டும் சமயத்தில் சவக்கிடங்கிற்குச் சென்ருர்கள். அச்சமயம் தான் சவங்கள் கொண்டுபோய் புதைக்கப்படும் காலம். இருவரும் அங்கிருந்த அச்சுதன் சவத்தைக்கண்டதே இருவரும் பிரமித்து நின்ருர்கள். இருவரும் ஒருவர் முகத்தை யொருவர் பார்த்து விழிக்கத் தொடங்கினுர்கள்.

கடைசியில் கறுப்பண்ணனே முதலில் வாய் திறந்து "இது அச்சுதன் சவமே யென்ருன். பிறகு லாயரும் "ஆம் சந்தேகமின்றி இது அச்சுதன் சவமே" யென்ருன்.

இருவரும் சவத்தை நன்ருய்ச் சோதித்துப் பார்த்தார்கள். லாயர்க்கு அவனிடம் 12 வருடப் பழக்கமிருக்கிறது. கடைசியில் சற்றும் சந்தேகமின்றி இவன் நம்மிடம் குமஸ்தாவா யிருந்தவனேயென்று நிச்சயமாயறிந்துகொண்டான்.

சவக்கிடங்கைவிட்டு வெளிப்பட்டதே லாயர் "இதென்ன விந்தை? எனக்கொன்றுமே விளங்கவில்லை" என்ருன்.

**கறுப்:**—"ஆம் இதென்னவோ பெரிய வியப்பும் கலவரமுமான சங்கதியே" என்ருன்.

லாயர் அவனை யென்வீட்டில் நான் பார்த்திராவிட்டால் நீயும் மலையாளியும் எதையோ கண்டு சபலித்து ஏமாந்து வீட்டீர்களென்றே கருதுவேன். அவனை யென் வீட்டில் கண்டதால் உங்கள் வார்த்தைகள் யாவும் உண்மையென்று நம்புகிறேன்." என்ருன்.

**கறுப்:**—அது ஒரு ஆவேசமென்றே நீ நம்புகிருயோ?
**லாயர்:**—ஆவேசமென்றே சந்தோஷப்படுகிறேன். (தொடரும்.)

ஆரணி. குப்புசாமி முதலியார்.

## பாதிரியார் வாக்கு.

வேலூரில் பிரபல அமெரிக்கன் பாதிரி ரெவரண்டு வாரன்வைஷஸ் ஒரு உபசாரப் பத்திரத்துக்குப் பதிலளிக்கையில் இந்தியர்கள் எந்த வகுப்பைச் சேர்ந்தவர்களா யிருந்தாலும் தம் தாய்நாட்டுக்கு உழைக்கவேண்டியது அவர்களது கடமை என்றும், மகாத்மா காந்திபோன்ற உத்தமர் போதிக்கு மாறு கதர் அணிதல் தேசசேவையில் முதற்படி யென்றும், அதை நாம் கட்டாயம் செய்து தீரவேண்டுமென்றும் சொல்லித் தமக்குக் கதர் அளிக்கப்பட்டதைப் பெரும் பாக்கியமாகக் கருதுவதாகவும் சொல்லி முடித்தார்.

(இந்த அறிஞர் கூறிய நற்புத்தி நம் நாட்டார் மனதில் எப்போது உறுத்துமோ அறியோம்.)

* * * * *

சேலத்திலுள்ள சிவன் கோயிலை அடுத்து, மண்டூக தீர்த்தம் என்று ஒரு தீர்த்தம் இருக்கிறதாம். ஆயிரம் தலைகொண்ட ஆதிசேஷன் இப்பொழுதும் அங்கு வந்து போகிறானும். அதனால் மண்டூகங்கள் அந்தத் தீர்த்தத்தில் வாழ்வதற்கஞ்சி அதைவிட்டு நீங்கிவிட்டனவாம். இப்பொழுதும் ஒரு தவளையைப் பிடித்து அந்தத் தீர்த்தத்தில் கொண்டுபோய்விட்டால், சிறிதுநேரத்தில் உடல் கருத்து இறந்துபோய்விடுகிறதாம்.

* * * * *

சென்னை திருவல்லிக்கேணி பார்த்தசாரதிப் பெருமாள் தெப்பக்குளத்தில் மீன்களே கிடையாது. ஒரு ஆழ்வாரால் இது ஏற்பட்டதாம். மதுரைப் பொற்றாமரையிலும் மீன் கிடையாது. சோமசுந்தரப் பெருமானைத் தொழுது முத்தியடைந்த ஒரு நாரை தன் சந்ததியார் தின்று கெட்டுப் போகாதவாறு அத்திருக்குளத்தில் மீன்கள் இருக்கலாகாதென்று பெருமானை வேண்டிக்கொண்டதாம்.

* * * * *

சேலம் ஜில்லா ஹரூர்த் தாலூகா தீர்த்தமலை என்னும் ஊரில் உள்ள சிறு குன்றில் ஒரு சிறிய துவாரத்தின் வழியாக சதா அருவிபோலத் தண்ணீர் வந்துகொண்டிருக்கிறதாம். தண்ணீர் எங்கிருந்து வருகிறதென்று தெரியவில்லை. ஜனங்கள் அதனை மிகவும் புனிதமாகக் கருதுகிறார்கள்; தீர்த்தம் வருவதால் தீர்த்தமலை யென்று பெயர் ஏற்பட்டதாம்.

* * * * *

சேலத்தையடுத்த தாராமங்கலத்திலுள்ள ராமர் கோயிலில், வாலியின் சிலையும் அவன்மீது அம்பு எய்யும் இராமரது சிலையும் இருக்கின்றனவாம். இராமர் சிலை இருக்குமிடத்திலிருந்து பார்த்தால் வாலியின் உருவம் தெரிகிறதாம். வாலி உருவம் நிற்குமிடத்திலிருந்து பார்த்தால் இராமரது உருவம் தெரிவதில்லையாம்; இதைச் சிற்பியின் கைத்திறமென்று சொல்லுகிறார்கள். இக்கோயிலில் ஒரு குகை யிருப்பதாகவும் சொல்லுகிறார்கள்.

* * * * *

திருச்செங்கோட்டு மலையை அடுத்த ஒரு பாறையின்மீது அறுபதடி நீளமுள்ள ஒரு பெரிய ஐந்து தலை நாகம் இருக்கிறதாம். அதற்குக் கொங்கு நாட்டு மலைச்சரியன்கள் பொங்கலிட்டுப் பூசை செய்கிறார்கள். இதனால் அவர்களுக்குப் பாம்புகளால் தீங்கு விளைவதில்லையாம்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

## இரக்தாக்ஷி ஞு தைமீ—கலியுகாதி 5026 சாலிவாகனம் 1847,
## பசலி 1334—கோல்லமாண்டு 1099-1100—ஹிஜரி 1343,
## இங்கிலீஷ் 1925ஞு ஜனவரிமீ—பிப்ரவரிமீ

| தைதீ | ஜனவரி | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | செவ் | திரி20-35 | மக56-13 | சித்60 | பொங்கல் பண்டிகை |
| 2 | 14 | புத | சது24-13 | பூர60 | அமி60 | மாட்டுப் பொங்கல் |
| 3 | 15 | வியா | பஞ்26-43 | பூர0-28 | சி0-28மர | |
| 4 | 16 | வெ | சஷ27-38 | உத்3-23 | சித்3-23அ | |
| 5 | 17 | சனி | சப்26-58 | அஸ்-4-45 | மர60 | |
| 6 | 18 | ஞா | அ24-33 | சித்4-30 | சித்60 | |
| 7 | 19 | திங் | நவ 20-25 | சுவா2-40 விசா59-15 | அ2-40மர | |
| 8 | 20 | செ | தச14-45 | அனு54-28 | சி54-28ம | |
| 9 | 21 | புத | ஏ7-50 து59-55 | கேட்48-30 | சி48-30ம | |
| 10 | 22 | வியா | திர51-30 | மூல41-53 | சித்60 | |
| 11 | 23 | வெ | சது42-40 | பூரா34-58 | பி34-58சி | போதாயன அமாவாசை |
| 12 | 24 | சனி | ●33-58 | உத்28-5 | சித்60 | தை அமாவாசை [பார்க்க |
| 13 | 25 | ஞா | பிர25-48 | திரு21-43 | அ21-43ம | சந்திர தரிசனம் உற்றுப் |
| 14 | 26 | திங் | து18-38 | அவி16-13 | சித்60 | காதுகுத்த, வித்யாரம்பம் செய்ய, கோடியுடுக்க |
| 15 | 27 | செ | திரி12-53 | சதை12-3 | மர60 | மாசசதுர்த்தி விரதம் |
| 16 | 28 | புத | சது8-43 | பூரட்9-30 | அ9-30சித் | சுபமுகூர்த்தங்கள் செய்ய |
| 17 | 29 | வியா | பஞ்6-18 | உத்8-48 | சித்60. | கரிநாள், சஷ்டி உபவாசம் |
| 18 | 30 | வெ | சஷ்5-45 | ரேவ10-3 | அமி60 | விவாகம், கோடியுடுக்க |
| 19 | 31 | சனி | சப்7-35 | அசு13-13 | சித்60 | ரத சப்தமி, மகா சப்தமி |
| 20 | 1 | ஞா | அ10-58 | பர18-0 | சித்60 | அடுப்புவைக்க |
| 21 | 2 | திங் | நவ15-53 | பர✕24-18 | ம24-18அ | கிருத்திகை, கடன்நீக்க |
| 22 | 3 | செவ் | தச21-53 | ரோ31-28 | அ31-28சி | யாத்திரை விலக்க |
| 23 | 4 | புத | ஏ28-25 | மிரு38-43 | சித்60 | சர்வ,மத்வ ஏகாதசி, சீமந்தம் முகூர்த்தங்கள் செ |
| 24 | 5 | வியா | து35 | திரு46-55 | ம46-55அ | பீஷ்ம துவாதசி [ய்ய |
| 25 | 6 | வெ | திர41-20 | புன54-8 | சி54-8மர | பிரதோஷம், விவாகம் [க் |
| 26 | 7 | சனி | சது46-53 | பூசம்60 | சித்60 | தைபூசம், திருதினஸ்பிரு |
| 27 | 8 | ஞா | ○51-43 | பூசம்0-43 | சித்60 | பௌர்ணமி, சந்திர கிரகணம் பரிசம் 47-32 |
| 28 | 9 | திங் | பிர55-20 | ஆயி6-30 | சி6-30மர | மாகபகுளம் |
| 29 | 10 | செவ் | துதி57-53 | மகம்11-10 | சித்60 | யாத்திரை விலக்க |
| 30 | 11 | புத | திரி59-15 | பூரம்14-48 | அமி60 | சித்திரம்எழுத,மாடுவாங்க கும்பரவி நா. 50-3. |

1925ஞு பிப்ரவரிமீ

| | | | |
|---|---|---|---|
| செ | | | |
| சூரி கே | 12உ மே-செ<br>21 ,, மக-புத<br>29 ,, மக சுக் | | ராகு |
| சுக் பு-கு | | சனி | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS